# நூல் விளக்கம்


| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | உள்ளத்தின் உள்ளல் |
| ஆசிரியர் | : | ஜெய்மா பவானி |
| மொழி | : | தமிழ் |
| வகை | : | பாடல்கள் |
| முதற்பதிப்பு | : | 2022 |
| நூலின் அளவு | : | டெம்மி |
| பக்கங்கள் | : | 120 |
| தாள் | : | A5 (5.83” X 8.27”) |
| எழுத்து அளவு | : | 12 புள்ளிகள் |
| உரிமை | : | ஆசிரியருக்கு |
| கட்டமைப்பு | : | சாதா பைண்டு அட்டை |
| கணினி அச்சு | : | ஓம் கிராபிக்ஸ் |
| வெளியீடு | : | பராவித்யா |
| விலை | : | அகவிழிப்பு |

# முகவுரை

அனைவருக்கும் அடியேனின் அன்புகலந்த வணக்கங்கள்.

இந்த நூலிலே தொகுக்கப்பட்ட பாடல்கள் அனைத்துமே, நாகர்கோவில் திருமதி. **ஜெய்மா பவானி** அவர்கள் தன்னுடைய உள்ளத்தில் எழுந்த உயர்வான உள்ளலை, “**பராவித்யா**” என்ற டெலிகிராம் குழுவில் எல்லோருமே எளிதாக அறிந்துக் கொள்ளக்கூடிய வகையில், அனுதினமும் அற்புதமாக எழுதிவந்தார்கள்.

அவைகளை எல்லாம் ஒன்றாக தொகுத்து, இந்த நூலில் இங்கு கொடுக்கப்படுகின்றது.

“**உள்ளுவது எல்லாம் உயர்வுள்ளல் மற்றது**
**தள்ளினும் தள்ளாமை நீர்த்து**”.

அதாவது, இந்த திருக்குறளில் கூறப்பட்டதுப் போன்று, நினைப்பன எல்லாம் உயர்வையே நினைக்கின்ற நிலையிலே, அந்த எண்ணங்களின் எழுச்சியும், அதன் ஆக்கமும், அடைய முயற்சிக்கும் போது, அனைவருக்கும் முடியாமல் போனாலும், உண்மையில் நாம் நினைப்பதெல்லாம் எப்போதும் உயர்ந்ததாகவே இருக்கட்டும்.

அது சில நேரங்களில் நமக்குக் கைகூடாமல் போகலாம். அதனால், தவறில்லை. அதற்காக அந்த முயற்சியை மட்டும் ஒருபோதும் நாம் கைவிட்டு விடக் கூடாது.

உங்களின் அந்த உயர்வான முயற்சி ஒரு நாள் பலராலும் பாராட்டப்படும். அந்த பாராட்டுதலே செயல் நடந்து முடிந்ததற்கு ஒப்பான உயர்வு மிக்கதாகும் என்கின்றது இந்தக்குறள்.

அந்த வகையிலே, மனதின் மயக்கத்தினால் உள்ள அறியாமையை அகற்றி, அறிவை அறியக்கூடிய அவரது ஆழமான புரிதல்களில் வெளிப்பட்ட எண்ணங்கள் உயர்வான சிந்தனைகளைக் கொண்டதாக உள்ளதினால், அவரது **உள்ளத்தின் உள்ளலை "பராவித்யா டெலிகிராம் குழுவில்"** உள்ளவர்கள் மட்டுமின்றி, மற்றவர்களும் படித்துப்பயனடைய வேண்டும் என்ற நல்லெண்ணத்திலே, அவைகளை எல்லாம் ஒன்றாகத்தொகுத்து, "**உள்ளத்தின் உள்ளல்**" என்ற தலைப்பிலே ஒன்றாகப்படிப்பதில் பரவசம் உள்ளது.

நன்றி!

என்றும் அன்புடன்,

**சுவாமி பிரபஞ்சநாதன்.**

# உள்ளத்தின் உள்ளல்!

ஜீவ ஜகத்திற்கு இறைவனே காரணம் என்பதால் இறைவனைத் தவிர இங்கே வேறாக எதுவுமே இல்லை.

உலகின் ஒரோர் வேஷத்திலும் இறைவனே தோற்றம் எடுத்து நடிக்கிறான். ஏன் அவ்வாறு நடிக்க வேண்டும்? என்பது அவனது சித்தம்.

மனித தேகத்தில் நடிக்கும்போது, அங்கே மனம் எனும் சக்தியால் மயக்கப்படும்போது, தான் ஒரு வேஷமிட்டு நடித்துக்கொண்டு இருப்பதை மறந்து, அதை நிஜம் என நம்பி அந்த வேஷத்தோடு தன்னை ஐக்கியப்படுத்திக் கொள்கிறான்.

இந்த நிலையில், "**அப்பா! நீ இறைவன்**!”.

வந்த வேலையை மறந்து விட்டு வேஷத்தில் போய் சிக்கிக் கொண்டாயே! **நீ உனது நிஜத்திற்கு திரும்பு!**... காலம் போதுமான அவகாசம் தராது!

நான் சொல்வதைக் கேட்டு உன்னை உணர்ந்து அறிந்து கொள்!" என சொன்னால், சொன்ன மாத்திரத்தில் ஏறிடுமோ?

பல மனித மனங்களில் உண்டான அனுபவங்கள் வாயிலாக, ஒரு சிலருக்கு அது சீக்கிரம் புரிகிறது.

அப்படியானால் என்ன படித்தும் உரை கேட்டும் புரியவே இல்லை என புலம்புவாரும் இருக்கின்றனர்.

அதற்கு அவசியமே இல்லை.

ஏனென்றால், நல்ல சத்சங்கத்தை அமைத்துக் கொண்டு, அதில் கூறப்படும் சத் விஷயங்களை உள்வாங்கிக் கொண்டே இருக்க வேண்டும்.

அதெப்படி என்றால், ஓர் செடி நன்றாக வளர வேண்டும் என்றால், ஆரம்பத்தில் அதற்கு முறையான பராமரிப்பு அவசியம்.

செடி வளரும் மண் வறண்டிருக்கும், சுற்றிலும் களைகள் பிடுங்கி எறிய முடியாதபடி உறுதியாக நிற்கும். தண்ணீர் விட, விட ஈரப்பதத்தில் செடி மென்மேலும் வளர்ந்து உறுதியாக வேரூன்றி நிற்கும்.

அதேசமயம், உறுதியான களைகள்கூட அசைவு கொடுத்து பிடுங்குவதற்கு தோதாக அமையும். அதோடு மண்ணிணோடு மண்ணாக மண்ணில் கலந்திருக்கும் கண்ணுக்குத் தெரியாத களைகள் புதிது புதிதாக முளைக்கத் தொடங்கும்.

தினமும் நீர் பாய்ச்சுவதால் வளர வளர களைகளை அகற்ற எளிதாக முடியும். செடியும் செழிப்பாக வளர்ந்து நல்ல பயனைக் கொடுக்கும்.

அதுபோலதான் **சத்சங்கம்** மூலமாக பெறும் நல்ல விஷயங்கள் அறிவு எனும் செடியின் வேரை உறுதிப்படுத்தி, அந்த அறிவுக்கு இடையூறாக உள்ள எண்ணங்கள் என்ற களைகளை அகற்றி, அந்த அறிவு என்ற செடிக்கு தக்க பலனளிப்பதோடு மட்டுமின்றி, அதனை சுற்றியும் வளர்ந்துள்ள களைகளை அகற்றி மனதை தூய்மையானதாக மாற்றி விடுகின்றது.

அத்தகைய வலிமையுடையது சத்சங்கம்.

கண்டு, கேட்டு, படித்து, முகர்ந்து, சுவைத்து, உணர்ந்த விஷயங்களில் ஆழ்ந்து துவண்டு வாடி இருக்கும் மனதிற்கு தெளிவையும், அமைதியையும் தருவதே **சத்சங்கம்.**

ஆகவே, அனைவரும் சாதுக்களின் சங்கத்தை ஏற்படுத்திக் கொள்ளுங்கள். அவர்களது சத் உரைகளை சதா கேட்டு மனதை அறிவாக மாற்றுங்கள்.

நன்றி!

- **ஜெய்மா பவானி**

மானிடனேயுன் பிறப்பினை உற்று பாராயோ

எது பிறந்ததங்கே யெனயுன்னை நீயும் ஆராயோ

உனதேக முளைவிட்ட ரகசியத்தை பாராயோ

தோற்றத்தின் காரண மெதுவெனநீ ஆராயோ

நீயுதித்தெதை கொணர்ந்தா யென்றேநீ பாராயோ

உனக்குலகை பழக்கியது யாரெனநீ ஆராயோ

சுட்டெரிக்குஞ் சூரியசந்திரன் முதலாயீதெல்லா
மீதனெவே பழக்கியுன்னை மயக்கிவைத்த சூட்சுமத்தை
ஆராயோ

பழக்கிவைத் தறிவினா லுலகைப்பார்க்கு மானிடா

உலகம் கண்முன் வந்ததேனென எண்ண மறுப்பதேனடா

தோற்றத்தால்தான் நீ புலப்படும் அதிசயத்தை பாராமல்

மயக்குமுலகின் மாயவலையில் சிக்கஆசை
கொள்வதேனடா

பேதமில்லா உன்னிடத்தி லிருமைபேத விதைத்ததாரடா

ஓர் தோற்றத்திற்கேந்த குதியாட்டம் போடுவதேனடா

ஊனுடைமை கலவியுறக்க மட்டுமின்ப மென்றதாரடா

நம்பி மோசம்போனதால்நீ புல்லறிவுக்கு சமமடா

மனதின் வழி சிந்திக்க புத்திதரப்பட வில்லையடா

யாரென்றேயுனை யறிய புத்தியைக்கொண்டு வந்தாயடா

பொறிகளைந்தும் செயல்படுவதாராலென்று பாரடா

உணர்வுணர்ச்சி தனையுன்னில் அனுபவிப்பதாரடா

மனமென்னும் புதிரை நம்பி மோசம் போகாதேடா

எண்ணமென்னும் பெரும்புதரே மனதேனறிந்து கொள்ளடா

மானுட தேகமது வாய்ப்பான வரமடா

ஆசைக்கொடியை பிடித்தேவந்த வாய்ப்பை விட்டிடாதேடா

மனமில்லா தேகத்திற் கனுபவமேது முண்டோடா

மனதைப்பின்னின் றியக்குஞ் சக்திதனை ஆராயடா

மானிடதேகமென்பது பலபிறவி புண்ணியமடா

எப்போது வாய்க்குமென்பதை நீயுமறிவாயோடா

அறியாமை எனுமிருள் சூழ எல்லாமே குழப்பந்தானடா

இருளகற்ற நீ செய்யுமத்தனையு முன்மடமையடா

இருளை விலக்க ஒளியொன்றே போதுமடா

அவ்வொளியு முன்னறிவென யுணர்ந்தாலே போதுமடா

பிறப்பின் பயனறியாது மோகங்கொண் டலையாதேடா

சுத்த சத்தியமான இறைவனே நீதானடா

சச்சிதானந்த பரம்பொருள் நீதானென்றிருக்க

உன்னைநம்புவதை விட்டுவிலகி ஓடுவதேனடா

உன்மனமுதலா யெல்லாமியங்குவ தாராலே
என்றாராயடா

அனைத்திற்கு மப்பாற்பட்ட சுத்தசைதன்யமே நீதானடா

நீகொண்டறிவை யுதறியுன்னை யறிந்து கொள்ளடா

பேதமில்லா மெய்ப்பொருளே நீயென யறிந்து
கொள்ளடா

நீயிருக்கும் வரைதானே உலகமுயிர் இறைவன்
தெரியுமே

நீயெனுநிலை யற்றகணமே மறைந்துபோகும் மாயமே

ப்ரபஞ்சமே தானாயுணர்ந்த சத்குருவின்
கருணையினாலே

நீயே மெய்ப்பொருளென் றிருசொல்லற நில்லடா

குருமகான் கிருபையாலே பரம்பொருளேநீ என்றுணரடா

சத்தியமான பரவஸ்து நீதானடா நீ தானடா

சுகபோதானந்தந் தரும் பரம்பொருளே நீ தானடா

[1]

கண்ணான கண்மணியென்றும் அழியா ஓவியமென்றும்
கண்ணிமைக்க மறக்கவைக்கும் அழகிலும் பேரழகாய்
உளது போல் நம்பும்படி கண்முன் வருமோர் தோற்றம்
கானல் நீரின் தன்மையதாம் மயக்குமாயத் தோற்றம்

மாலையிளங் காற்றாகி மனதினை மயக்கும்
மான்போல துள்ளிஓடி விளையாட ஏங்கும்
பாரெல்லாம் அனுபவிக்க ஆசைகொள்ள விரியும்
தன்மையதாம் பொல்லாமனதின் மயக்குமாயத் தோற்றம்

சிந்திக்க தோன்றா தாசைதனை பெருக்கும்
தன்நிலை மறக்கச்செய் துன்மத்த னாக்கும்
தன்னலத்தில் கர்வத்தால் தப்புத்தாளம் போடும்
தன்மையதாம் சத்தைமறைக்கு மயக்குமாயத் தோற்றம்

மனம்விரிய உலகம்பல விசித்திரமாய் தோன்றும்
மக்களென பல்லுயிர்கள் வேடிக்கைகளை காட்டும்

பல்லுருவில் இறைவனென்று கொண்டாட்டங் காணும்
தன்மையதாம் மாயையெனும் மனதின் மாயத்தோற்றம்

மண்ணாகி மாயவலையை கண்முன்னே வீசும்
பொன்னாகி பொல்லாசை தனைக் கொண்டே யாடும்
மாயப்பேயா மாதராசை கொண்டே பின்னோடும்
மூவாசை பெருஞ்சுழலை கொண்ட மாயத்தோற்றம்

மனமெழங்கே எண்ணமதற்கு சித்தமலங் காரணம்
மும்மல மழித்திடவழி தன்னையறியும் ஞானம்
அனுபவத்தி லுணர்ந்தஞானி கூட்டந்தனில் சேர
அதுபயனாய் சத்தின்சித்து விளையாட்டு புரியும்

மாயைதனை விளக்கி விலக புரியாத புதிராம்
புதிரான கோந்தாமோர் திக்கில்லா பெருங்காடாம்
மனதின் மாயவலை மாயலீலை என்பான் ஞானி
புலனடக்கி லீலைதனை வேடிக்கை பார்ப்பான் [2]

ஆனந்த கோலாகலமே ஏகாந்தமே

எங்கும் ஆனந்தம் எதிலும் ஆனந்தம்

பரமசுகானந்தம் (ஏகாந்தம்) பேரானந்தம்

உள்ளொளிதனில் உன்னை உணரவே ஆனந்தம்

நீயே நானென்பதில் பெருகுது பேரின்பம்

சுயம்ப்ரகாசத்தில் தெரியுது ஆனந்த லோகம்

அமைதியின் அன்பான கோலாகல கொண்டாட்டம்.

[3]

சுடரொன்னு உள்ளிருக்கே - அதனொளி

உன்னூனுடம்பை யாட்டிவைக்குதே

அகங்கார முளையறுத்தே

சித்தத்தின்தெளிவாலதந் தரிசனமுங் கிடைத்திடுமே

கொடுந்தீமையழித்திடுமே

மனக்கட்டையவிழ்த்திடுமே

விடுதலைதந்திடுமே

தொல்லையெனும் நெடுங்காட்டை யன்பாலே
பொசுக்கிடுமே

மனக்கவலைதனை மறக்கடிக்குமே
தீராமனவலியை தீர்த்துவைக்குமே
அச்சந்தனை சுட்டெரிக்குமே
அஞ்சேலென்றுதியாய் தன்தரிசனந் தந்திடுமே

ஆணவத்தை வேறருக்குமே
தன்மையோடு வாழச்செய்யுமே
கட்டுக்களை பொடியாக்கிடுமே
சுதந்திரமா யிதயவானில் சிறகடித்து பறக்கச் செய்யுமே

ஈதியற்கை என்பாருண்டு - பஞ்ச
பூதப்பிணைப் பென்பாருமுண்டு
ஈதில்லையென்பாருமுண்டு
அறிவேயுயிர்த்தீயாமது ஈசனென்பாருமுண்டு

அன்பேயச்சுடரா மென்பரே
எஞ்சாமி யெனபேர்சொல்லி கூத்தாடுவரே
இன்பமிதுவேயென புகழ்பாடிடுவரே
சலனத்தில் துன்பங்கூறி யுன்னையிசைப்பரே

பாகுபாடேதுமின்றி

அணுவிலணுவாயொடுங்கி

பலதாய் பெரிதாய் விரிந்து

அனைத்திற்கு மாதாரமா பூதமென் றேதொழுவர்

ஞாலமெனும் வெளியினிலே யிந்த

ஞானவொளி வீசுவதாலே

கானல்நீரெனும் பிரமைபோலே

உலகமுயிரிறையென தோற்றம் வந்து மறையுதே!

[4]

பாரெங்கும் பார்க்கிற மனங்கொண்ட மனிதா

உன்னுள்ளுத்தமனை பாராதிருத்தல் முறையோ

உனக்கான பணிமறந்து பேராசை கொள்ளலாகுமோ

ஆசையாலலைபவர் பின்னோடிவழி நீசருக்கலாமோ

நன்றிதுதீதென கூறும் சான்றோருரை மீளலாமோ

யாவுமீசனென்றே சரணடைய தயங்கலாமோ

ஏனைய பிறப்பெல்லாங் குறைகூறக் கண்டாயோ

ஏதேதோபுலம்பி நாடகமாடி பழிபோடக் கண்டாயோ

அஃதிது வேணுமென்ற லைந்துதிரியக் கண்டாயோ
நாளைக்கென் றெல்லாஞ் சேர்த்தது வைக்க
கண்டாயோ

காண்பதிங்கே யோருணவுச் சங்கிலியென அறிவாயோ
காலமிங்கே யெவர்க்குங் காத்திராதென அறிவாயோ
அறவழிசார்ந்துன் கடமையை யர்ப்பணிக் கறிவாயோ
மனவடக்கத்தாலுன் மூவாசையொழிக்கும்
வழியறிவாயோ

சூதுபொய்களவு நோய்நடுக்க விக்கல் விசும்பல்
பகைநட்பு கடன்வரவு உறவு பங்காளி சுற்றம்
மானவமானம் கோபத்தோடகங்காரம் வஞ்சக மோதல்
மெனுமிவைபோ லியற்கையா மானிடபிறவிக்கென
யறிவாயோ

நெஞ்சிலுறுதி யோடுதீவிர வைராக்கிய மனத்தால்
சத்சங்கந்தந்த யத்வைதஞானமெனுங் கவசத்தால்
ஊழினை யெதிர்கொண் டமைதியோடு நிற்பவனை
தீதேதுஞ்சூழா வண்ணம் பரம்பொருளேயிரங்கி காக்கும்

[5]

நன்றொன்று செய்தேனென பெருமை வேண்டா

வையத்துளொன் றொன்றுமோர் திறமையுடைத்து

தாயுந்தந்தையும் கண்முன்னுள்ள இறைவனே

காலந்தனதென்று எதையும் கொள்ளாதே

நல்லோர்க்காற்று முதவி நிலைத்ததாம் மற்றவை நிலையாதே

இளமைசேர் வறுமையு முதுமைசேர் செல்வமும் தீராதுயரன்றி பயனில்லை

நல்லோருறவு நிலை தாழ்ந்திடினும் மேன்மை தரும்

வாழ்வினொரு கணமேனு மிறைவனை தொழு

இறைவனையுணர பேராசை கொள்

கல்வியறிவே சிறந்த செல்வம்

செய்யுங் கருமம்யாவுங் காலங்கூடி பருவப்பயனே

நீரளவேயாகு மாம்பல்போல் கற்றறிவு

குலத்தளவேயாகுங் குணப்பேறு

அயலாரைப்பழிப்பானே பகையாளி

சான்றோரோம்பும் மக்களா லீன்றவர்க்கு பெருமை

முற்பிறவி புண்ணியபலனே செல்வசுகம்

ஞானவாயிலைந்துந் தவத்திலோங்க சிறப்பு

அகங்காரமழிய நிற்பதே தவம்

தெளிந்தமைதியோடு நிதானங்கூடிய மனங்கொள்

புகழைவிரும்பினா லுழைக்க கற்றுகொள்

சத்சங்கத்தை தேடிப் பெறு

சாத்திரத்திலும் குருவிடத்தும் நம்பிக்கைவை

பலநிலை கடந்தே முழுமை பயனாகும்

இல்லறமே மேன்மைகள் யாவும் தரவல்ல நல்லறம்

உருவங்கண்டெள்ளல் வேண்டா

தேவையறிந்துதவுதல் நலம்

ஏழ்மை கூறேல்
அறியேனென்று வஞ்சகஞ்செய்யேல்

தீனனாயறிந்தும் வலிமை பேசேல்

தன்னைப்போல் மற்றுயிரை நேசி

மனமொப்பா செயலோர் விரதமேயாயினும் பாழ்

காலமறிந்துண்ணல் நலம்

பஞ்சமாபாதகந்தவிர்

காற்றோடுடனாகிய நெருப்பாம் கோள் சொல்லல்

பொறாமையெனும் பெருந்நெருப்பில் வளர்ச்சி கருகும்

பிறருணர்வுக் குறிப்பறியாதவன் நெடுமரமே

ஞானசித்தியானோர்க் கெல்லாமோர் குடும்பமே

உதவிடாது சேர்த்த பொருள் காணாமல் போகும்

நேர்ந்த கெடுதலை எண்ணியிறாதுவிடல் நலம்

வேகத்திலும் விவேகங்கொண்ட நிதானம் பயனளிக்கும்

நயந்து பொருள்பட பேசு மற்றல்லால் மௌனமே துணை

நன்றியுணர்வோடிருத்த லவசியம்

பிறர் குற்றங்களை யாராய்ந்தோர் பயனுமில்லை

விவேகமில்லாபேச்சு வேதனையளிக்கும்

எறும்பைப்போலிரு

சுயமுயற்சியே சிறந்த பயனாம்

திறமையும் விடாமுயற்யோடுகூடிய தன்னம்பிக்கையே சாதிக்கும்

மழையேயமிழ்தமாகும்

இல்லறத்தினழகு விருந்தோம்பலில்

யாசிக்காதிருத்தல் வல்லவனுக்கழகு

மாலுமியில்லாவோடம் பாழ்

அற்பனுக்காற்றுமுதவி யார்க்கும் பயனிலாது

மெய்ஞானத்தினெல்லை மோனநிலை
காலுணவரை நீருமீத காற்றுமே உடலுக்கு நலம்

சான்றோடக்கத்தை சோதிக்குமெண்ணம் வேண்டா

துன்பத்தில் கைகோர்த்து மீட்பதே நல்லுறவு

தாழ்விலும் மனந்தளராதே

அண்டையரை பகைக்க குடும்பமே நசியுமே

கிடைக்காதொன்றை மறத்தலே நலந்தரும்

நல்லெண்ணமுஞ் செயலுமே சான்றோர்க்கழகு

தேவையற்ற எண்ணந்தவிர்

சான்றோரது துக்கத்திலும் மேன்மை ப்ரகாசிக்கும்

தீராசுகமென் றொட்டியுறவாடுவதெல்லாம் வியாதியே

மலரைநாடும் வண்டுபோல் கற்றாரை கற்றாரே நாடுவர்

சான்றோர் வாக்கறியாதவர்க் கென்றுந்துயரே காண்

நல்வாசம்போல் சான்றோரது மனம் தூயதாயாகும்

உயிர்சக்தி உள்ளவரை தான் ஆடுமாட்டமெல்லாம்

சான்றோர் பாகுபாடில்லா குணமெனுங் குன்றேறுவர்.

[6]

பறக்கும் பறவையெலாம் நானே

திரியும் விலங்குகளெலாம் நானே

மரஞ்செடிகொடிகளெலாம் நானே

பூக்கும் பூக்களெல்லாம் நானே

மண்விண்கடல்காற்றுநீரெலாம் நானே

நட்சத்திரக்கூட்டமெல்லாம் நானே

நீரில்விளையாடும் மீனெல்லாம் நானே

புழுபூச்சியென எல்லாவுயிரினமும் நானே

சதுர்மறைவேதமும் நானே பாண்டித்யமும் நானே

கவிஞர்களும் கவிதைகளும் நானே

கதைகளும் கலைகளும் புலமையும் நானே

மலையொடருவி மாடகோயில் கோபுரமெலாம் நானே

இன்ப துன்பம் நானே பொய்யுமெய்யும் நானே

ஆண்பெண்ணலியும் நானே உற்றஞ்சுற்றமும் நானே

இன்பவெள்ளமாய் ஆர்ப்பரிக்கும் யாவையும் நானே

பொருள்களின்தன்மை குணம்பண்புசெயலோசை நானே

மனதோடதினெண்ணம் சிந்தையாவும் நானே

அனைத்தின் காரணமும் நானே காரியமும் நானே

இயங்குமியங்கா பொருள்களி னியல்பெலாம் நானே

எண்ணுவதுமதை நடத்துபவனும் நானே

சிரித்தழுதேற்றியதை சீயெனவெறுப்பவனும் நானே

அண்டபிண்டமெலாம் நானே

உள்ளும்புறமுமாய் வெட்டவெளியாயிருப்பவன் நானே

அனைத்திற்குமாதார மாபூதங்களுமதன்சக்தியும் நானே

அண்டபிண்டங்களை சமைத்து ருசிப்பவன் நானே

பிழையெனிலதையொடுக்கிவைப்பதும் நானே

பொய்யானநானைக் கூறுவதும் நானே

மெய்வானில் ஞானச்சுடராயொளிர்பவனும் நானே

சத்தியம் நானே நித்தியம் நானே

அழியா மெய்யுணர்வு நிலையில் நிலைபெறுவதும் நானே.

[7]

நெஞ்சிலுறுதி வேண்டும்

பசிக்கன்னம் வேண்டும்

மாரிதவறாது பொழிய வேண்டும்

இன்சுவை நீர் வேண்டும்

தூயகாற்று வேண்டும்

ஆணவமொழிய வேண்டும்

நானெனதெனுமறியாமை நீங்க வேண்டும்

இயற்கை காக்கப்பட வேண்டும்

பயிர்வளஞ்செழிக்க வேண்டும்

உண்மையே பேச வேண்டும்

அரசன்முறையாக ஆட்சிசெய்ய வேண்டும்

அறங்களோங்கி வளர வேண்டும்

புறங்கூறாதிருத்தல் வேண்டும்

எல்லாயுயிரையும் போற்ற வேண்டும்

வேண்டாததை விட்டுவிடல் வேண்டும்

பேச்சில் நளினம் வேண்டும்

நல்லெண்ணம் வேண்டும்

நல்லோருறவு வேண்டும்

நல்லதையே நினைக்க வேண்டும்

செயலிலுறுதி வேண்டும்

ஒழுக்கத்திலொழுகல் வேண்டும்

பெண்மை போற்றப்பட வேண்டும்

தெளிந்த நல்லறிவு வேண்டும்

மனவடக்கம் வேண்டும்

கோபந்தவிர்த்தல் வேண்டும்

சாதிக்கும் வல்லமை வேண்டும்

ஆழ்ந்த பார்வை வேண்டும்

சான்றோரை நாட வேண்டும்

நற்பண்புகள் மேலோங்க வேண்டும்

வெற்றியின் நட்பு வேண்டும்

சாத்திரங்களில் தேர்ச்சி வேண்டும்

சீரிய விவேகம் வேண்டும்

பேதங்காணா மனம் வேண்டும்

தீவிர வைராக்கியம் வேண்டும்

நேசம் பெருக வேண்டும்

தியாகவுணர்வு வேண்டும்

இறையுணர்வு மேலோங்க வேண்டும்

அச்சஞ்செயிக்கப்பட வேண்டும்

பொறுமையோடு சகித்தல் வேண்டும்

கள்ளமில்லாசிரிப்பு வேண்டும்

வையஞ்செழிக்க வேண்டும்

ஞானப்பசியோடிருத்தல் வேண்டும்

ஞானத்தில் தெளிவு வேண்டும்

தூயவிழிப்புணர்வு வேண்டும்

தவவாழ்க்கை மேலோங்க வேண்டும்

இறைவாயுனை மறவாதிருக்க வேண்டும்

வேறென்ன வேண்டுமென நீ நினைத்ததைத்தரவே

விரைந்தோடி வரவும் வேண்டும்

ஓம்! ஓம்! ஓம்!

[8]

இயற்கையிங்கே யாதொரு தொழிலையும்
செய்வதில்லை
கடமையை பலனுக்காக செய்வதுமில்லை
ஆனாலுமேதோ செய்கிறதென்றேயென பார்த்தேன்
அன்பினாட்சியங்கே நிலைபெறக் கண்டேன்!

பேதங்களில்லா நிலையினைக் கண்டேன்
சுதந்திரமாயெங்கு முலாவிடக் கண்டேன்
எதிர்பார்ப்பில்லாதோ ரொழுங்கைக் கண்டேன்
அதனரவணைப்பிலோர் சுகத்தைக் கண்டேன்

ஆனந்தமங்கே பெருகக் கண்டேன்
நானுமதனோடொன்றிடக் கண்டேன்
பரவசமாயெங்கும் நான் விரிந்திடக்கண்டேன்
என்னே மகத்தான அன்பினாட்சி

அன்பேயிறையென மறையோர் கூறியதிதையே
தன்னையுணர அன்பேமலர்ந்து பிரகாசிக்கிறது
அதன் மணத்தை பாரெங்கும் வீசச்செய்வதுமன்பே
அன்பே தூயமெய்யே யுனையுணர்ந்தகணமே
வீடுற்றேன். [9]

மடமனமே சென்றதை நினைத்து வருந்தலாமோ?
போனகாலமென்றாவது திரும்பிவரக் கண்டாயோ?

வருவதை நினைத்துபயங் கொள்ளலாமோ?
யூகித்தூகித்தெதை தான் எதிர்பார்த்திருக்கிறாய்?

நடப்பதேதுமுன்வசமில்லை யென்றறிந்து
அதனையேற்க ஏனோ மறுக்கிறாய்! ஆச்சரியம்!

சிறிதுஞ்சளைக்கா தோய்விலாதோடும் மனமே
நீயாயெதையும் நாடாதுன் தலைவனைக் காண்

இன்றேபுதிதாய்ப் பிறந்ததாய் தீவிரமாயெண்ணுவாய்
புதியதாய் நல்லெண்ணந்தனை விதைப்பாய்

அனைத்தையுங் களிப்புற ஏற்றானந்தங் கொள்வாய்
தீயதெல்லாம் ஒளிந்தோட விழிப்புணர்வோடிருப்பாய்

அஞ்சல்மடமனமே நீ புதிதாய் பிறந்துவிட்டாய்.

[10]

ஞானந்தேடி யோடுபவரென்றால்
உலகாசைக்கு மயங்கலாமோ?

அரிதாமோர் மானிடப்பிறவியெனறிந்தவர்
உண்மைநிலை தவறலாமோ?

பிறப்பென்றாலிறப் புண்டெனறிந்தவர்
தேகாபிமானங் கொள்ளலாமோ?

அறுசுவையுணவிற்காசை கொண்டவர்
போதைக்கலையலாமோ?

பார்புகழ நல்லறத்தை விரும்புவர்
பிறரிகழும்படியான செயலாற்றுவரோ?

புகழ்ச்சியை விரும்பேனெனக் கொண்டவர்
புகழ்ச்சிக்கேங்கலாமோ?

நித்தியசுகானந்தந் தேடியலைபவர்
நிலையற்றதன்பின்னோடுவரோ?

தேகத்தை கோயிலாக கருதுவோர்
மனதிலழுக்கை சுமக்கலாமோ?

எங்குமிறையுள்ளதென்போர்
குலத்தாழ்த்தியுயர்த்தி பேசலாகுமோ?

அனைத்திலுமிறையுண்டென்போர்
மற்றோருயிரை வதைக்கலாமோ?

பசிக்காயுணவென்பவர்
ருசியெனக்கண்டு சுவைக்கடிமையாவரோ?

தன்னைப்போலனைவரையு மரவணைக்க
விரும்புவோர்
பிறருணர்வை புரியாமல் போவாரோ?

துறந்துவிட்டேனென்பவர்
தன்மேலோ ரபிமானங் கொள்ளலாமோ?

மனத்தையடக்க யெண்ணங்கொண்டவர்
இருமைபேதங் கொள்ளலாமோ?

பிறர்க்குதவாசை கொண்டவர்
தன்பெருமை பேசியதை பறைசாற்றலாமோ?

பொதுநலங் கொண்டே செயலிலுழல்பவர்
ஆதாயந்தேடி யலையலாமோ?

[11]

எனையறிய வழிதந்தாய் குருதேவனே
உன்பாதம் பணிந்திட்டேன் வேதாந்த மெய்யனே

மானாடும் மயிலாடும் ஆட்டத்திற் களவுண்டு
மனமாடும் ஆட்டத்தை அடக்கிடும் வழிதந்தாய்

அளவில்லா ஆட்டத்தா லலைந்து திரிந்தேனே
ஆனாலுமுள்ளே அமைதியைக் கண்டறியேன்
அகந்தையை அழிக்கவோ ருபாயமுமறியேனே
அருள்புரிவாய் ஞான சத்குரு தேலனே

புன்னகையாலுலகை வலம்வரு மாதவனே
கருணைமழை பொழிந்து நானிலங் காப்பவனே
ஆனந்தமே வடிவா யவதரித்த வள்ளலே
அருள்புரிவாய் ஞான சத்குரு தேவனே.

[12]

பாட வந்தேனம்மா உனை
ஆடிக்கொண்டாடி அகமகிழ்ந்திடவே

ஞானமும் பக்தியும் சாந்தியும் பெருகிட
அடியவரை சுமந்த செந்தமிழ் தேவியுனை

தீந்தமிழ்க் கவிதையுன் பொன்னான பட்டாடை
சாத்திரங்கள் நீசூடும் செந்தமிழாரம்
ஞாயிறாயொளிவீசும் பாவலர் பெருமையென
ஆயகலைகளின் அற்புதமே உன்புகழை

[13]

இறையருளென்ன கடையில் கிடைக்குமோ?
அப்புறமென்றால் காலந்தான் நிற்குமோ?
நிலையில்லாத வாழ்வை நிஜமென நீ நம்பினாய்
அந்தோ பரிதாபம் அல்லலுற்றழுகின்றாய்

உறவும் நிஜமில்லை பொருளும் நிஜமில்லை
உற்றார் நிஜமில்லை சுற்றமும் நிஜமில்லை
உலகம் நிஜமில்லை மக்களும் நிஜமில்லை
நீயும் நிஜமில்லை நானும் நிஜமில்லை

இறைவனிடம் உனையர்ப் பணித்துவிடு
அவனே குருவாக வருவானென்றே நம்பியிரு
மேலானாத்மோ பதேசந்தனை பெற்றுவிடு
பிறவிப்பிணியாம் பெருந்துயர் நீக்கிவிடு

ஆனந்தமே வடிவாய் நீ இருப்பாயே
பரமானந்தமே உன்னுள் கொண்டிருப்பாயே
பேரானந்தத்தேனை பருகிடுவாயே
பரசுகானந்தனாய் நின்றிருப்பாயே. [14]

ஒருமுகமாயிருந்து பலர்வாழ வழி செய்யும்
குருநாதனே யுனை சரணடைந்தேன்
குறையொன்றுமில்லாத குருதேவனே என்
குறைகளை தீர்த்தருள வழிகாட்டியருள்கவே

அலைந்தாடும் மனதினிலே அமைதியுமில்லை
மனதினையடக்கியாள அபலையால் முடியவில்லை
குருதேவா தஞ்சமென்ற புலம்பலை விடுவதில்லை
பாராமலிருப்பதேனோ உனைவிடப்போவதில்லை.

[15]

.

ஆனந்த நடனமாடுவதேன் மனமே
ஆனந்தமே வடிவா யிருப்பதனாலோ

ஞானமே வடிவான குருவைநீ உணர்ந்தனையோ
அவர்தங் கருணையாலே உனையுணர்ந்து
கொண்டனையோ

உனையுணர்ந்ததாலே பரத்தினை யறிந்தனையோ
உள்ளொளி பெருகிட அமைதியைக் கொண்டனையோ
ஆனந்தமே வடிவாயுனை நீ பெற்றனையோ
எங்கும் பரமானந்தத் தேனைப்பருகினையோ

[16]

கண்கள் தெரிவதாராலே யுணருங்
காற்று வீசுவது யாராலே
காதுகள் கேட்பது யாராலே வாசனை
மூக்கு நுகர்வது யாராலே

நாக்கு சுவையறிவ தாராலே போடும் வித்தில்
மரஞ்செடியாவது யாராலே
பூக்களின் மணம் எதனாலே உதிக்குஞ்
சூரியன் ஒளிர்வ தாராலே

காட்சிகள் தெரிவதாராலே அவையும்
மாறுபடுவது எதனாலே
உலகமியங்குவது யாராலே இத்தனையும்
ஈதென சொல்லியது எதனாலே

மாற்றத்தை விரும்பும் மானிடா உன்
விருப்பமெல்லாம் மாறிய தேனடா

உன்னையறிய ப்ரபஞ்சம் விளங்கு
மென்பதாலுன்னை யுற்று பாரடா

காட்சியை ஆராய விரும்பினாலே அதன்
பின்னோடியே காலம் கரைந்திடுமே
உன்னையாராய இருக்குமிடம் போதும்
சிந்திக்க சித்தம் தெளிவாகும்

ஊனுடம்பை சற்று சிந்தித்தாலே போதும்
தேகாபிமானந்தான் பறந்திடுமே
சவமுமுன் னுடம்பும் ஒன்றாயிருக்க
வேறாயிருந் தியக்குவதாரோடா

மூச்சினாலே இயக்கமுண்டென்றா லதை
சவமுள்ளிழுக்காத தேனோடா
ரேசபூர கும்பகமெல்லா மீவழிதானென
வேறாயிருந் தியக்குவது யாரோடா

மனதை யுனதாக சிந்தித்தாலே

மிருகபட்சியாய் சேட்டை செய்திடுதே

வேண்டாமென்றாலு வேண்டாததை நோக்கி

மனம் போவதாராலோ அறிவாயோடா

புத்தியே பெரிதென கொண்டால திருமை

பேதங்களை கொள்வதேனோடா

தடுமாற்றந்தரும் புத்தி நாசத்தை தருமே

நாசத்தி லானந்தஞ் சரியாமோடா

நிம்மதி சுகமென் றோடுவதெல்லா

முன்னானந்த வழிதேடித்தானேடா

நீ தேடுமானந்தம் வளர்கொடியதற்கு

ஆசைக்கொழுவைப் பிடித்தாயடா

தூங்கும் நிலையி லங்கே கனவை

நடத்தி வேடிக்கை பார்ப்பது யார்

கனவில்லா போதுமங்கே யுன்னை சாட்சியாய்

வேடிக்கை பார்ப்பது யாரோடா

தூக்கத்தி லானந்தங் கொண்டாயெனி லது

தெரியாமல் போனதேனோடா

மூன்றவஸ்தையிலும் உன்னுள்ளே வேறாக

சாட்சியாய் நிற்பது யாரெனபார்

முன்னவரெல்லாம் நிலையற்றதற்கு

சாட்சியாய் கைவீசி போனாரேடா

ஆதலினா லெதன்மீ தபிமானமும்

வைக்காதுண்மையை ஆராயடா

ஆனந்தமுனக்கு தேவையென்றாலதை

வெளியில் தேடிய லையலாமோ

உன்னிலானந்த மெங்கேயுள்ள தென்றே

உன்னையுற்றுத்தான் பாரேன்டா

ஆனந்தமதற்கு வேறோர் பெயருண் டது

இறைவனென்றே நீ அறிவாயோ

உன்னிலறிவா யிருப்பவனை விட்டு

வேடிக்கை காணநாட்டம் எதுக்கோடா

சாட்சியாய் நிற்பவர் சூத்திரதாரியாம்

உத்தமகோத்தமன் நீதானடா

சாட்சியென்றுன்னை யுணருங்கணமே

உன்னை நீயும் பெறுவாயடா

பஞ்சகோச விவேகந்தனை

ஆராய உன்னைப் பெறலாமே

கேனேஷிதமென்றே சாத்திரங் கூறுவதை

ஆராய உன்னைப் பெறலாமே

ப்ரபஞ்சத்திலெல்லாந் தானாயுணர்ந்த

சத்குருநாதரின் கிருபையாலே

சச்சிதானந்தமே நீதானடா சுத்த

சைதன்யம் நீதான்டா நீதான்டா

கும்மியடி பெண்ணே கும்மியடி

உன்னையறிந்தா யென்றே கும்மியடி

கும்மியடி பெண்ணே கும்மியடி

மெய்ப்பொருள் நீயென்றே கும்மியடி. [17]

மனததுவே முத்தேவருமாகும்

சுராசுர னைவருமாகும்

எண்ணத்தோடு இணைய கிளியே

அவர்செய்கையாகுமடி கிளியே

மனதே தொழிலாற்றுதடி

கற்பனை செய்யும் புத்தியு மனமே

உறுதிசொல்லும் சித்தமு மனமே

அகங்காரமமகாரமும் மனமே

அல்லலார்ப்பரிக்குமடி கிளியே

அத்தனையு மேற்குமடி

மனததுவே ஜீவனுமாகும்

அபிமானத்தால் பந்தமுமாகும்

கர்த்தாபோக்தாவும் மனமே கிளியே

போகப்பொருளுமதுவே கிளியே

மனமே யாவுமடி

மனதே சங்கல்பஞ் செய்யும்

கற்பனையாய் சந்தேகம் கொள்ளும்

துக்கபயம் கொள்ளும் கிளியே

தன்னைத்தானே வருத்திக் கொள்ளும் கிளியே

தனக்குத்தானே உண்டாக்குமடி

மனதேபல ஆசைகொண்டே

கர்மம்பல செய்து மகிழுமே

சுகத்தை துக்கமெனுமே கிளியே

துக்கத்தை சுகமெனுமே கிளியே

வேடிக்கையானதடி

எண்ணத்தி லிணைந்த மனமே

உலகமுயி ரிறைவனுமாகும்

எண்ணத்தாலே மலருமடி கிளியே

எண்ணமறது ப்ரம்மமடி கிளியே

மனததை அறியுமடி

விகார சிந்தனை யொழிக்க

மனதே யகண்டமாகும்

பூரண நிஷ்டையாகும் கிளியே

பற்றற மோட்சமாகும் கிளியே

வீடுபேறு மனதிற்கடி

பேதமற்று பார்ப்பதாலே

விகாரமற்று கேட்பதாலே

அமைதி பழக்கமாகும் கிளியே

எண்ணமற்றே பேச்சடங்கும் மனதடங்க

மனம் ஆத்மசுகம் பெறுமடி

ப்ரம்மானந்தத்திலூறி

தன்தேகத்தை இயக்குவதாகி

குடும்பத்தை அனுபவிக்கும் கிளியே

வசுதைவ குடும்பமடி கிளியே

ப்ரம்மானந்தத்தையே பேசுமடி

ப்ரம்மானந்தத்தில் தோய்ந்து அதை

சுவைத்துபருகி திருப்தியுங் கொண்டு

தாமே ப்ரம்மானந்தமாய் நிற்பான் கிளியே

தன்தேக மறந்தே நடப்பான் கிளியே

பரசொரூபமடி

அண்ட சராசர மெல்லாந்

தனாயுணர்ந்த சத்குருநாதன்

மலரடி கருணையாலே கிளியே

ப்ரம்மானந்தத்தி லூறுவாய் கிளியே

பேரானந்தம் கொள்வாய் [18]

பதினெண் புராண மிதிகாசத்தோடதன்

காரியகாரணம் பொய் பெண்ணே கேளாய்

வேதசாத்திர ஆகமம் பொய்

யாகயோகமந்த்ர தந்த்ரானுஷ்டான

அஷ்டமாசித்தியும் பொய் பெண்ணே கேளாய்

உலகமுயிரிறை பொய்

**பரப்ரம்ம மொன்றே மெய்யென**

**ஆனந்தக்கூத்தாடடி**

கற்பனையா யெண்ணும் மனதும்பொய் எண்ணியதை
சொல்லும் வசனமும் பொய் பெண்ணே கேளாய்

இகபரசுகமது பொய்

மோட்சமென்றொன்றை யடையும்வழியென

சொல்லுமனைத்தும் பொய் பெண்ணே கேளாய்

சொர்க்கநரக பயம் பொய்

**பரப்ரம்ம மொன்றே மெய்யென**

**ஆனந்தக்கூத்தாடடி**

கற்பிக்கும் புத்திபொய் எண்ணவ்ருத்தி பொய்யுண்மை

யென்றெண்ணு மெல்லாம்பொய் கேளாய் பெண்ணே

சித்தமதுவும் பொய் உற்றமுஞ் சுற்றமு மற்றவரும்
பொய்

கொண்டாடும் பந்தமும் பொய் கேளாய் பெண்ணே

விருத்தி வியாபாரம் பொய்

**பரப்ரம்ம மொன்றே மெய்யென**

**ஆனந்தக்கூத்தாடடி**

கர்மஞானேந்திரிய மந்தக்கரணம் பொய்

நானெனதென்பதும் பொய் கேளாய் பெண்ணே

இந்திரிய போகங்கள் பொய்

புசிக்குமன்ன பானாதி யுடனதன்

விளைவுகளெல்லாம் பொய் கேளாய் பெண்ணே

சுகபோகமனைத்தும்பொய்

**பரப்ரம்ம மொன்றே மெய்யென**

**ஆனந்தக்கூத்தாடடி**

உனக்கயலாய் நீயுள்ளதென்று கூறும்

சாதிமதஇனம் பொய் கேளாய் பெண்ணே

பேசும் மொழியெல்லாம் பொய்

சம்பிரதாயங் குலங்கோத்திர மிவைகளை

வர்ணிக்கும்நீதிகள் பொய் கேளாய் பெண்ணே

கர்மமும் பலனும் பொய்

**பரப்ரம்ம மொன்றே மெய்யென**

**ஆனந்தக்கூத்தாடடி**

ஆயகலை அறுபத்து நான்கோடதன்

வித்தை பயிற்சிகள் பொய் கேளாய் பெண்ணே

எவ்வித தோஷங்களும் பொய்

தியானசமாதி நாதஓசைகள் பொய்

பெறும் சாந்திநிலை பொய் கேளாய் பெண்ணே

அஞ்ஞானமுமிங்கே பொய்

**பரப்ரம்ம மொன்றே மெய்யென**

**ஆனந்தக்கூத்தாடடி**

சூரியசந்திரன் பொய்யா மதனாலே

பகலு மிறவும் பொய் கேளாய் பெண்ணே

முத்தொழிலென்பதும் பொய்

தேவதெய்வத்தின் காட்சியும் பொய்யவர்

காரியமெல்லாம் பொய் கேளாய் பெண்ணே

அந்நியமெல்லாம் பொய்

**பரப்ரம்ம மொன்றே மெய்யென**

**ஆனந்தக்கூத்தாடடி**

உனக்கயலா யில்லாதன்மையா லுன்னில்

உணர்வென கலப்பாய் கேளாய் பெண்ணே

பரசொரூபம் நீ

நீயேயதுவென் றோர்மித்த தன்மையால்

அண்டபிண்டமெல்லாம் நீ கேளாய் பெண்ணே

பரமானந்த சமுத்திரம் நீ

**பரப்ரம்ம மொன்றே மெய்யென**

**ஆனந்தக்கூத்தாடடி**

அண்டமெல்லாந் தானாயுணர்ந்த மகான்சத்

குருநாதன் மலரடி கருணையாலே

தன்னில் தானா யிருப்பதும் நீயந்த

பரம சுகானுபலம் நீ

உயர் சச்சிதானந்தன் நீ

பரப்ரம்மமொன்றே நீ

**பரப்ரம்ம மொன்றே மெய்யென**

**ஆனந்தக்கூத்தாடடி.** [19]

மானிட உடலென் றொண்ணு வேணும்

பிறந்த பயனறிய வகை செய்ய வேணும்

அதற்கு நல்மனமென் றொண்ணு வேணும்

சிந்தித்து செயல்படு மறிவு வேணும்

மனதுக் கென்றுமோ ரொழுங்கு வேணும்

தர்மத்தின் வழிபோக வேணும்

மனம் செயலாற்ற உடம்புக் குணவு வேணும்

வந்த காரண மாராய வேணும்

மனதிற்கு தீர்க்கமான தெளிவு வேணும்

மனதின் பிடியை யுணர வேணும்

மனதிற்கு புனிதமான சங்கம் வேணும்

சத்தை யறியும் நோக்கம் வேணும்

மனப் பக்குவத்திற் காராதனை வேணும்

இறையுண்டெனும் நம்பிக்கை வேணும்

மனப் பக்குவத்திற்கென பூசைகள் வேணும்

செபத்யான தவவேள்வி வேணும்

மனப் பக்குவத்திற் கப்யாசம் வேணும்

சித்தமதில் மலங்க ளொழிக்க வேணும்

மனப் பக்குவத்திற்கே யோகசாதனை வேணும்

வாசியெனுங் குதிரை திறனோடோட வேணும்

மனதிற்கு இதந்தரும் புனிதம் வேணும்

சாத்திரம் தேடி படிக்க வேணும்

மனப் பக்குவத்திற்கே புண்ணியம் வேணும்

நானாரென ஆராயு மெண்ணம் வேணும்

மனதி னியல்புரைக்கும் சத்குருநாதன் வேணும்

தன்னையறியும் வழி கேட்டிட வேணும்

மனதிற்கோ முறையான சித்தி வேணும்

உள்ளத்தில் மூலத்தை அறிய வேணும்

மனதிற்கு வைராக்கிய சாதனை வேணும்

பொறிகளையடக்க தெரிய வேணும்

மனதின் தெளிவிற்கு ஞானம் வேணும்

:சாத்திரத்தின் நோக்கம் புரிய வேணும்

மனம் ஞானமடைய சிரவணம் வேணும்

சந்தேகமின்றி தெளிவடைய வேணும்

கேட்டலின் எல்லையாம் மனனம் வேணும்

போதனையை சிந்திக்க தனிமை வேணும்

மனனத்தின் எல்லையாம் நிதித்யாசனம் வேணும்

மூலமறிந்தே தில்நிற்க வேணும்

மனம தடங்கிட விவேகம் வேணும்

நித்யாநித்ய பேதந் தெரிய வேணும்

மனதினோட்டத்தை தடுக்க வைராக்கியம் வேணும்

மூலந் தானென்பதி லாழ்ந்த உறுதி வேணும்

இத்தனைக்கு மனதின் சுயமுயற்சி வேணும்

கருவைக் கண்டதி லயமாக வேணும்

தேஜோமயானந்த ப்ரபஞ்சமே

தானேயானவர் கருணையாலே

மூலம் நீயேனறிந்து கொள்ளடா

அமைதியில் ஆனந்தநடன மாடடா. [20]

கல்லில், புல்லில் இறைவனைக் காணும் மனிதா!
உன்னில் இறைவனையுணர்ந்தாயா?

காடு, மலையில் கடவுளை தேடும் மனிதா!
அவனைக் கருத்தில் இருத்தி கொண்டாயா?

மண்ணிலும், பொன்னிலும் பணியும் மனிதா!
மற்ற தேகத்தில் பரமனை கண்டாயா?

காய், கனி படைத்து வழிபடும் மனிதா!
படைத்தவனையறிந்து கொண்டாயா?

மரத்தை, இலையை பூசிக்கும் மனிதா!
அதன் புனிதத்தை புரிந்து கொண்டாயா?

பூவிலும், பாவிலும் போற்றும் மனிதா!
பூசைகள் எதற்கென கண்டாயா?

செடியை, கொடியை சேவிக்கும் மனிதா!

சேவைகள் செய்ய மறந்தாயா?

விலங்கை, பறவையை இறை வாகனமாக்கிய மனிதா!

விவேகத்தை வளர்த்து கொண்டாயா?

காணுமனைத்திலும் கடவுளைக் கண்ட மனிதா!

அவனை உன் உள்ளத்தில் உணர்வாய் உணர்ந்தாயா?

[21]

ஆனைமுகனொடு வேலன் ஞானாம்பிகை யோடீசன்

உவமையற்ற வேதப்பொருளாம் உத்தமகுருவை வணங்கி

உயர்ஞான மகாவாக்கிய உட்பொருளை பருகிப்பூச

பிறப்பறுக்கும் அத்வைதானு பூதியேபெருங் காப்பாம்

கடைக்கண்ணால் பார்த்து காக்கயிது சமயம்

குருவே கதியின்றி நின்னை சரணடைந்தேன்

சம்சாரதுக்கம் போக்கி என்னையுணர வேண்டி

பிறப்பின் பயனறிய அடைக்கலமானே னங்கே (கடைக்)

ஊனுடலாவி தன்னை ஒருங்கக் கட்டறுத்து

ஞானமே திடமான உபநிஷத்தாம் சோலைதனில்

காணுமுலகை துச்சமென்றே சச்சிதானந்தத்தி லமர்ந்தபடி

உண்மை ஞானப்பொருளானபந்தை நாதகுருவும் வீசினார்

இருவினைகள் அற்ற தன்சொரூப தியானத்தில்

அண்டபிண்டமெலா மிதயவானி லொடுங்கும்படி

சாச்வதமான சைதன்யப்பபந்தை உத்தமகுருவும் வீச

ஞானப்பந்தை வைராக்கியத்தோடு எட்டிப் பிடித்தேன்

மூலஅகங்கார முளையை வேறொ டறுத்து

சுகதுக்க சாகரத்தை முழுதாய் வற்றடிக்கும்படி

மகாவாக்கிய உபதேசப்பந்தை லாவகமாய்குருவும் வீச

ஞானப்பந்தை வைராக்கியத்தோடு எட்டிப் பிடித்தேன்

உபாதிகள் அற்றதான எண்ணங்கள் திடமாக

தனதான்ய தனயனெனும் பந்தங்களொழிய

எட்டுச்சாணுடம்பை பொசுக்கும் ஞானாக்னிபந்தை குருவீச

ஞானப்பந்தை வைராக்கியத்தோடு எட்டிப் பிடித்தேன்

விசேஷமாய்கூடியலையும் போக்குவரவை நஷ்டித்து

பொல்லாமதவாத பேதங்களை பொடியாய் தகர்த்து

சர்வம் ப்ரம்மமயமென்ற பேரொளிப்பந்தை குருநாதர் வீச

ஞானப்பந்தை வைராக்கியத்தோடு எட்டிப் பிடித்தேன்

மோசம்செய்யு மாசையாம் கள்வரை மாய்த்து

பிரமைகள் ஒழிந்தி ருமைக ளகலும்படி

மோக்ஷ சாக்ஷாத்காரபந்தை குறிவைத்து குருவும் வீச

ஞானப்பந்தை வைராக்கியத்தோடு எட்டிப் பிடித்தேன்

நாசசரீராதி கோசங்களை நேதிவிசாரத்தா லகற்றி

அஞ்ஞான பெருங்காட்டினை ஞானத்தீயில் பொசுக்க

நாதப்ரம்மானந்த வேதசாரப்பந்தை வேகமாய்குருவும் வீச

ஞானப்பந்தை வைராக்கியத்தோடு எட்டிப் பிடித்தேன்

யோனிபேத மொழித்து தாபத்ரயம் சாம்பலாக

ஆசையெனும் பந்தவலை நாதனருளால் அறுபட

ஓங்காரவெளி மாடத்தில் ஸத்சங்கபந்தை குருநாதர் வீச

ஞானப்பந்தை வைராக்கியத்தோடு எட்டிப் பிடித்தேன்

அனுதினமு மாத்மஞானராகத்தை யுணர்ந்துபாடி

அபரிமித அபரோக்ஷ ஆனந்தத்தை பருகியாட

அசஞ்சல மனோதிட அத்வைதப்பந்தை குருசமயத்தில் வீச

ஞானப்பந்தை வைராக்கியத்தோடு எட்டிப் பிடித்தேன்

சிந்தைமகிழ்ந்து தினமும் சிவயோகத்தில் திளைத்திருக்க

நாமரூபமற்ற ஞானமோன முத்திரை தரித்திருக்க

ஆதியந்தமற்ற விவேகானந்த ரசப்பந்தை சத்குருவும் வீச

ஞானப்பந்தை வைராக்கியத்தோடு எட்டிப் பிடித்தேன்

ப்ரம்மமேவ சத்யமென் றெண்ணம் திடம்பட

எட்டாத பரவஸ்துவை ப்ரம்மநிஷ்டையில் கண்டுகளிக்க

ஏகாக்ரமானபந்தை கருணையோடு குருவும் வீச

ஞானப்பந்தை வைராக்கியத்தோடு எட்டிப் பிடித்தேன்

சத்யஞானானந்த ரசப்பந்தை பிடித்து பூஜித்தேன்

அஹம் ப்ரம்மமெனவே சித்தத்தில் பதித்து வைத்தேன்

ப்ரஜ்ஞானப்ரம்மமென்றே நாதகுருவருளா
லுணரப்பெற்றேன்

ப்ரம்மைக்ய பேறைப்பெற்றே பேரானந்தத்தில்
திளைத்தேன்

[22]

**(அயிகிரி நந்தினி மெட்டு))**

ஜீவனென்று தன்னை கூறிக்கொண் டொருவன்

சஞ்சிதகர்மத்தின் பலனாலே

புண்ணியமிக்க மானிட தேகங்கொண்டே

ஜகந்தனில் சாதுவுடன் வந்துதித்தான்

இயலாமையினால் ஜீவன் பிறந்ததும்

எடுப்பார் கைப்பிள்ளை போலானான்

மஹிரிஷி சாதுவும் முக்காலமுணர்ந்ததாலே
ஜீவனை ஆட்கொள்ள காத்திருந்தார்

மலங்க விழித்த ஜீவனும் மருட்சியால்
உலகமுயிரிறை உண்டென்றான்
அஞ்ஞானாவரண பரோபரோட்ச
விக்ஷேப சுகதுக்கத்தி லுழன்றான்

பசுவினைத்தேடும் கன்றினைப் போலங்கே
அமைதியை தேடி தத்தளித்தான்
பிரமைகொண்டே இந்த உலகை பார்த்ததன்
மயக்கத்திலே தன் அறிவிழந்தான்

காணுந் தோற்ற மனைத்தையும் நம்பியே
அதன்பின்னோடி அலைந்துவந்தான்
பொய்யான இந்த தோற்றந் தனதென்று
போதங்கெட்டே ஆள எண்ணங் கொண்டான்

எண்சாண் கலத்திற் ககங்காரமெனும்
மந்திரியை வைத்தழகு செய்தான்
மமதையெனுமோர் யானையின் மீதேறி
கர்வத்தா லெங்குஞ் சுற்றி வந்தான்

காஞ்சன காமினியில் மயங்கியதா லவன்
ப்ரவ்ருத்தி யெனுமாதை மணந்து கொண்டான்
நிவ்ருத்தி யெனுஞ்சாது மஹிரிஷி பேச்சை
புறந்தள்ளி யொதுக்கி கர்வங் கொண்டான்

ராகத்வேஷமெனும் ரட்டை பிள்ளைகளாலே
தன்நிலை மறந்து கொண்டாடினான்
ஆசையெனும் வேசி சமயத்தில் புகுந்து
ஜீவனை கைவசம் வைத்துக் கொண்டாள்

தர்மத்தை மறந்த ஜீவனை யர்த்தமெனும்
சர்ப்பம் தீண்டவே பித்துக்கொண்டான்

மேலும் மேலுமென்றே எண்ணமெழுந்திட
எல்லாமடைந்திட செயல்புரிந்தான்

போதுமென்றே எண்ணம் தோன்றினாலும் அங்கே
ஆசையெனும் வேசி விடுவதில்லை
எல்லாம் உண்மையென நம்பியதாலே
அறியாமையெனும் காட்டில் திரிந்து வந்தான்

காமக்ரோதமெனும் கள்ளரும் வந்தங்கே
அகப்பட்டதையெல்லாம் பிடுங்கி கொண்டார்
தாபத்ரயமெனும் நெருப்பும் பற்றிக்கொள்ள
செய்வதறியாமல் சோர்ந்து விட்டான்

தன்னாலாவ தொன்றுமில்லையென
அறிந்தே ஜீவனும் துக்கம் கொண்டான்
பாபி என்றே தன்னை நொந்தழுது வெறுத்து
காண்பதையெல்லாம் வெறுக்கலானான்

முன்பின் நிகழ்வினை சிந்தித்தபடியே
வாழுங்காலத்தை மறந்து போனான்
அடைக்கலந் தருபவராரோ வென்றெண்ணியே
தாபத்தைக்கொண்டு காத்திருந்தான்

பூர்வ புண்ணிய பலனாலே மறந்த
சாதுவெங்கே என தேடி வந்தான்
ப்ரபஞ்சத்தை உணர்ந்த பூரணரும் அங்கே
குருவடிவாக காட்சி தந்தார்

கண்டதும் அவரடி தொழுது சரணடைந்து
ஜீவனு மழுதங்கே புலம்பி விட்டான்
ஜீவனை கருணையால் வருடிக்கொடுத்தே
பூரணரு முபதேசம் செய்தார்

சம்சார மெனும் சாகரம் கடக்க
மகாவாக்கிய பொருள் கூறினார்

வைராக்கியத்தை இழந்ததாலே
ஜீவா மதிகெட்டாய் என்றார்

எல்லாம் மனதின் கற்பனை யென்றார்
சுத்த சைதன்யம் நீ என்றார்
யத் பாவம் தத்பவதி எனக்கூறி
நீயே ப்ரம்மம் என மொழிந்தார்

பராவித்யா வெனும் சாத்திர பொக்கிஷத்தை
அன்புடனே குரு திறந்து வைத்தார்
ஜீவனும் அனைத்தையு முணர்ந்து உள்வாங்கி
குருவின் மொழிக்கு காத்து நின்றான்

பூரணரின் மொழியில் நம்பிக்கை ஒன்றே
சாதனமதுவே கரையேற்று மென்றார்
சிரவணாதிகள் கொண்டு சிந்தனை செய்யும்
வகைகளை காட்டி யருள் புரிந்தார்

சாதன சதுஷ்டய முறைகளை கூறி

ப்ரம்மத்தில் நிலைபெற வழிசெய்தார்

அத்வைத துடுப்பை பரிசளித்தே இந்த

ஞானப்படகில் கரையேற செய்தார்

ஜீவனும் தன்னை உணர்ந்ததாலங்கே

தன்னில் தானா யிருந்துவிட்டான்

குருக்ருபையை கொண்டாடி மகிழ்ந்தே

அவரடி தொழுது வணங்கி நின்றான். [23]

ஞானபரமே ஏலேலோ ஞானாரண்யமே ஏலேலோ

சித்ப்ரகாசமே ஏலேலோ ஸ்வயம்ப்ரகாசமே ஏலேலோ

கருணாநிலையே ஏலேலோ காலதேசமில்லா ஏலேலோ

அகண்ட வெளியே ஏலேலோ அருள் நிறையே ஏலேலோ

தயாபரமே ஏலேலோ தேஜோமயானந்தமே ஏலேலோ

சாக்ஷிபூதமே ஏலேலோ சித்ரூபமே ஏலேலோ

ஆதிமத்யந்தமில்லா ஏலேலோ ஆதிபரமே ஏலேலோ

குறைகளில்லாத ஏலேலோ குணாதீதமே ஏலேலோ

ஊழ்வினையழித்திடும் ஏலேலோ உத்தம ஞானமே ஏலேலோ

சம்சாரப்பேயை ஏலேலோ விரட்டியடிக்க ஏலேலோ

சத்குருநாதராய் ஏலேலோ அவதரிக்கிறாய் ஏலேலோ

வையந்தனிலே ஏலேலோ வாக்யார்த்த போதனை ஏலேலோ

செய்துவரமருள ஏலேலோ வேதசாரமாய் வந்தாய் ஏலேலோ

பரமாகாசமே ஏலேலோ பூர்ணானந்தனே ஏலேலோ

சுத்தசைதன்யமே ஏலேலோ பரமசுகானந்தனே ஏலேலோ

கைவல்யஞானத்தை ஏலேலோ காட்டுங்காரணரூபனே ஏலேலோ

ஞானபோதந்தனில் ஏலேலோ திளைக்குமுத்தமனே ஏலேலோ

அபரிதகருணையாலே ஏலேலோ ஆத்மகாரகனானாய் ஏலேலோ

அஞ்ஞான இருளை ஏலேலோ ஒழிக்க வந்தாய் ஏலேலோ

அருந்துயரகற்றியே ஏலேலோ காத்தருள்வாயே ஏலேலோ

மோகமயக்கந்தனை ஏலேலோ மாற்றியாதரிப்பாய் ஏலேலோ

கோபதாபங்களை ஏலேலோ தீர்த்துகாத்தருள்வாய் ஏலேலோ

ஆசாபாச வலையை ஏலேலோ அறுத்தாதரிப்பாய் ஏலேலோ

வாசனையெனும் கொடியை ஏலேலோ வேறோடறுப்பாயே ஏலேலோ

சோகமோகமகற்றி ஏலேலோ ஸ்வரூபம்காட்டியருள்வாய் ஏலேலோ

மாயமயக்க மாற்றி ஏலேலோ காத்தருள்வாய் ஏலேலோ

உழலுஞ்ஜீவனை ஏலேலோ மகோன்னதமாக்கும் ஏலேலோ

ஓங்காருட்பொருளை ஏலேலோ உகந்தருள்வாய் ஏலேலோ

மகாவாக்கியமெனும் ஏலேலோ அமிர்தமழையை ஏலேலோ

பொழியச்செய்து நனைய ஏலேலோ பருகிடசெய்வாய் ஏலேலோ

மாசற்ற ஜோதியே ஏலேலோ எமை உத்தமனாக்குவாய் ஏலேலோ

பாங்கான சமாதிதனில் ஏலேலோ
யோகசாக்ஷியாக்குவாய் ஏலேலோ

உயர்ப்ரம்மானந்தத்திலே ஏலேலோ திளைக்கச்செய்வாய் ஏலேலோ

ஸஜ்ஜனகோடிகளின் ஏலேலோ ஞானதருவே ஏலேலோ

ஞானவெளி வீதியில் ஏலேலோ உலவும் பூர்ணசந்த்ரனே ஏலேலோ

இஷ்டபவானீயே ஏலேலோ ப்ரபஞ்ச நாதகுருவானாய் ஏலேலோ

சதானந்த பரமே ஏலேலோ காத்தருள்வாயே ஏலேலோ

சச்சிதானந்தபோதா ஏலேலோ உன்னை சரணடைந்தேன் ஏலேலோ

ஏலேலோ ஏலேலோ ஏலேலெலேலோ ஏலேலோ

ஏலேலோ ஏலேலோ ஏலேலெலேலோ ஏலேலோ. [24]

சுத்த சைதன்யம் ஆத்மனாம்

ஸ்வயம் ஜோதியான ப்ரம்மம் ஆத்மனாம்

அது சாசுவதமான ஆத்மனாம்

அதுவே சத்சிதானந்தமானதாம்

அறிவேயுருகொண்ட ஆத்மனாம்

நாமரூபமெல்லாம் ஆத்மனாம்

அது ப்ரம்மானந்தம் தரும் ஆத்மனாம்

அதுவே பரவெளியாயானதாம்

முக்குணங்கள் கடந்த நிற்குணணாம்

சாக்ஷியாய் வேடிக்கை பார்த்திடுமாம்

அத்வைதஞானமனுபவத்தில்

தன்னையுணரச் செய்திடுமாம்

பாசவலையை அறுத்தெறிக்கும் ஞானம்

சுகபோதாநந்தந்தரும் ஆத்மஞானம்

வாசனையொழித்திடும் ஞானம்

சித்ரூபமாய் விளங்கும் ஆத்மஞானம்

முக்திபாதமளிக்கும் ஆத்மஞானம்

மோக்ஷசொரூபமாம் ஆத்மஞானம்

நித்தியானந்தந்தரும் ஆத்மஞானம்

நிராகாரமானது ஆத்மஞானம்

தன்மயமானது ஆத்மஞானம்

வேதாந்தசாரமாம் ஆத்மஞானம்

ஏகாக்ரமானது ஆத்மஞானம்

பேரனந்தநிலையாம் ஆத்மஞானம்

அஞ்ஞானயிருளை போக்கிடும் ஞானம்

ஞானவெளியை காட்டிடும் ஞானம்

காமக்ரோதத்தை வென்றிடும் ஞானம்

ப்ரக்ஞானப்ரம்மமெனும் ஆத்மஞானம்

தாபத்ரயந்தனை போக்கிடும் ஞானம்

பந்தபயமகற்றும் அத்வைதஞானம்

தீராவினையொழிக்கும் ஆத்மஞானம்

துஷ்டசம்ஹாரஞ்செய்யும் ஆத்மஞானம்

போக்குவரத் தொழிக்கும் ஞானம்

வாக்கிற்குமனத்திற்கு மெட்டாஞானம்

த்ரிபுடிகளற்ற உயர்ந்த ஞானம்

பரிபூரணமான ஆத்மஞானம்

யோனிபேதமொழிக்கும் ஆத்மஞானம்

காலத்ரயமற்ற ஆத்மஞானம்

சாஸ்திரவிதியற்ற ஆத்மஞானம்

சத்சொரூபமான ஆத்மஞானம்

அல்லலொழிக்கும் ஆத்மஞானம்

ஐயமொழித்திடும் ஆத்மஞானம்

மனப்ராந்தியொழித்திடும் ஆத்மஞானம்

மந்தபுத்தியழிக்கும் ஆத்மஞானம்

ஜகத்வியாபியாம் ஆத்மஞானம்

தபயோகிகள் விரும்பும் ஆத்மஞானம்

அறிவுப்பரமானது ஆத்மஞானம்

அபரிமிதகருணையாம் ஆத்மஞானம்

மங்களமானது ஆத்மஞானம்

மங்கலமருள்வது ஆத்மஞானம்

யாண்டுமிருப்பது ஆத்மஞானம்

சித்பரானந்தம் அத்வைதஞானம். [25]

மகாமோகங்கொண்டே மாய்ந்தலையும் மானிடர்க்கு

ஞானோபதேசஞ் செய்யவேயுதித்த சத்குருவே உமக்கு நமஸ்காரம்

கோந்தாமில்லறத்தில் ஈடுபட்டலையும் மானிடர்க்கு

ஞானோபதேசஞ் செய்யவேயுதித்த காரணரே உமக்கு நமஸ்காரம்

அஞ்ஞானசாகரத்தில் மூழ்கியலைகிற மூடமானிடர்க்கு

முக்திபதத்தை யளிக்கவேயுதித்த மகத்குருவே உமக்கு நமஸ்காரம்

நாறுமுடலை நாமரூபத்தாலாசை கொண்டலையும் பேதையர்க்கு

பரமானந்தபதத்தை யளிக்கவேயுதித்த சிவகுருவே உமக்கு நமஸ்காரம்

பஞ்சபூதங்களை கொஞ்சியணைத்து மகிழுவஞ்சகமனதை

உவந்துவந்துகாக்கும் ப்ரபஞ்சவிலக்ஷண குருவே உமக்கு நமஸ்காரம்

விகாரமாறனைத்தையுங் கூறுகூறாய்ப் பிளக்கும்படி

ஆத்மோபதேசஞ் செய்யவேயுதித்த பரிபூரணரே உமக்கு நமஸ்காரம்

இழிவாமாயவலை யறுத்தெறிந்தேகவெளிக்காட்ட

எளியேனுக்காவதரித்த ஜகத்குருவே உமக்கு நமஸ்காரம்

தறிகெட்டலையும் புத்திகெட்ட மானிடர்க்காயிரங்கி

ஞானோபதேசஞ் செய்யவேயுதித்த சைதன்யமே உமக்கு நமஸ்காரம்

ஓயாத்துயரிலாழ்த்தும் ஒன்பதோட்டைக் கலனைப்பூட்டி

ஞானோபதேசஞ் செய்யவேயுதித்த ஓங்காரப்பொருளே உமக்கு நமஸ்காரம்

பக்திவைராக்கிய பாதையேதுமறியா பாமரர்க்கு

ஞானோபதேசஞ் செய்யவேயுதித்த சச்சிதானந்தரே உமக்கு நமஸ்காரம்

அறியாமையால் வாசனைகளோடலையும் மானிடர்க்கு

அத்வைதஞானரசத்தை யளிக்கவேயுதித்த சித்ரூபரே உமக்கு நமஸ்காரம்

ஆசையெனும் பெருங்காட்டில் ஏமாந்தலைபவர்க்கு

பேரின்பமளிக்கவேயுதித்த என்தேசிகரே உமக்கு நமஸ்காரம்

பந்துக்களெனுஞ்சந்தையிலே புகழ்ச்சிக்காயலையும் மாந்தர்க்கு

வேதாந்தசாரரசத்தை யளிக்கவேயுதித்த ஏகாந்தரே உமக்கு நமஸ்காரம்

ஆதியந்தமில்லாதவரே அன்பர்க்கருளும் நேசரே

ஞானநிஷ்டையருள் செய்யவேயுதித்த காருண்யரே உமக்கு நமஸ்காரம்

ஜகமுழுதுமாய் பரவெளியையேகாட்டி

சுத்தசைதன்யமேநீயென்றருள் செய்யவேயுதித்த

தன்மயமான தயாபரரே உமக்கு நமஸ்காரம்

ஏகாந்தமாயிருந்துகொண்டு வேதாந்தசாரமான

அத்வைதஞானரசத்தை யளிக்கவேகாத்திருக்கும்

பரிபூரண ப்ரபஞ்சநாதரே உமக்கு நமஸ்காரம்.

[26]

ஓம்சக்திசக்திஜெயவென கொண்டாடிடுவேன்
ஈங்கவளென்னை யிருத்தியீதெல்லாமீதனவே
உணர்த்தியதை உணர்ந்தவாறு சொல்லுகிறேன்
இந்த நானிலம் பயனுறவே

வாழ்வு என்பதோர் நெடுங்கனவே
வாழ்ந்தவர் சரித்திரமெல்லா மிங்கே
பொய்யாய்ப்பழங் கதையுடனோர் கனவாய்
மறந்துமறைந்தே போனதென அறிவாயோ?

திரும்பத்திரும்ப இரைதேடி உண்டுறங்கி
பிறர்க்கிடர் செய்ததில் மகிழ்ந்து திளைத்து
ஆசைக்காவென வாழ்வதாக கூறித்தன்னை
மனிதனென்று பறைசாற்றுவது சரியாமோ?

புலனைந்து மின்புறவே செயல்பல புரிந்து
விரும்பியதன் பின்னோடும் மானிடனேனோ

தன்மனத்தை சற்றுமறியாது பிறரைச்சீண்டி
பிறரில் குற்றங்குறை கூறியலைவது சரியாமோ?

நெஞ்சகத்தே நஞ்சைவைத்து பாம்பைப்போலாகி
ஆடுபோலாசையில் துள்ளித்தாவி களித்து
கழுதையாய் சுகதுக்கமென்று தீராபொதிசுமந்து
கோழியாய்ப்பலர் கதைகளை கொத்திக்கிளறியென

மிருகபட்சிகளுக் கிணையாய் செயலாற்றி
வேடிக்கையாய்ப் பலவீண்கதைகள் பேசி
கொண்டமூவாசைக் கடிமையாய் பல்பொருள்நாடி
வீழுமோரிடையூறிலும் தன்னையறியாது புலம்பாமோ?

விதியைநொந் தன்பரைத்தூற்றி பகைவரைச்சாடி
பொல்லாச்சாதிகள் கூறிப்பொய் சாத்திரம்பேசி
சாதகச்சுவடியைப் புரட்டிப்பொய் நாத்திகம்பேசுமானிடா
நிறைந்தவிருப்பமே கதிகளாவுந்தருமென அறிவாயோ?

மனத்தொட்டிலாடி பலநினைந் தென்னபயன்?

பழையனகழிந்த தாகிப்போகவதைப் பிடித்தென்னபயன்?

புதியனவெனயூகித் தெதிர்பார்த்துப்பெரு மூச்சிட்டென்ன பயன்?

உன்னுணர்வை மறந்துவாழுங்கணமே வாழாதுபோகாமோ?

முன்னவர்போ லாசைக்காவென சிலநாள்

வாழ்ந்துடலை வெறுதேவீணாக்கி போகவென்றே

சிந்தைபலசெய்து வாழ்ந்தேனென்று மார்தட்டி

பெருமைபாராட்டி சாவேனென்று மடியாமோ?

அனைத்துமென்னால் தானென்ற கர்வமேனோ!!

கண்டுணர்ந்துகேட்டு சுவைத்து முகர்ந்துமென

புலனைந்து மனத்தாலேவப்பட யதுவேமாயை

என்றுணராமல் மயங்கியெதை கொண்டோமென ஆடுகிறாய்?

சகமுழுதுமென் னன்னையையே காண்பாய் - அவளே

உலகமுயிரிறையாய் பல தோற்றம் கொண்டாள்

அவளேமனதினதி சூட்சுமசித்தமாகி யாடுகிறாள்

காரணமவளென் றறியாமல்காரியத்தில் பெருமை
கொள்ளாமோ?

காரியங்களெல்லா மோர்காரணத்தி லொடுங்க

உன்காரியமென சிறுமைபாராட்ட இங்கேதுமே

நிகழவில்லை நிகழ்வதென தெரிவதெல்லாம்

செப்படிவித்தைபோல் மனதில் வந்துபோவதன்றோ

ஞானியரோடு துறவும்பெற்றோ ரன்னையை

அனைத்துமாய் கண்டுபோற்றி வாழ்வாங்குவாழ்வார்

துயரன்றிபிறிதை காணார்நிலை குறித்துகூறவும்
வேணுமோ?

வீணாயினியேனுந் தாமதியாதுன்னை யுணரவழிகாணாய்

என்னாலாவதென தொன்றுமில்லை யெனசரணடைந்தால்

தன்னைத்தந்துன்னைக் காட்டிக்கொடுக்கு மாசக்தியவள்

சகமுழுதுமவள் நாடகமவளே ஈசனில்பாதியென்றறிவாய்

ஈசன்சித்தமே அன்னையாமவளே
மாயாமனதென்றறிவாய்

நெஞ்சிலுறுதியையுந் தெளிவானறிவையும்

உள்ளத்திலன்பெனும் பெருவெள்ளோட்டத்தையும்

பொழுதெலாமுன் பேரருளின்நாட்டத்தோடு

மரணத்தைவெல்லு மத்துவைதநிலையில் வைப்பாய்
கருப்பொருளே!

[27]

உன்னியல்பறிந்தவ ருன்னில் மயங்குவரோ

மனத்தூய்மை கொண்டாரை நீசெய்வதென யாதுமுண்டோ?

தூயதெளிந்த சித்தமுன் நிற்பாயோ

என்னைக்கெடுக்கவென்றே கெட்டஎண்ணம் கொண்டாயோ

எத்தனைவிதமாய் வேஷமிட்டு வந்தாலும்

உன்னைக்கெடுப்பதில் உறுதிகொண்டேன் மாயையே

ஊனுடம்பைபொய்யென்னும் தீரரின்முன்னென்செய்வாய்

இருமைபேத மொழிந்தபின் எங்கிருந்து வருவாய்

நீதரும் இன்பத்தில் வீழ்வேனென நினைத்தாயோ

கபடநாடகமென்முன் வேண்டாம் மடமாயையே

என்னிச்சை கொண்டுன்னை விரட்டுவேன் மாயமாயையே

வைராக்கியமெனும் வாளால்பொடிபொடியாக்குவேனுன்னை

ஏதேதோகாரணங்கூறி பின்னேநீ வந்தாலும்

மதியாதுனை தைரியமாயோரங் கட்டுவேன் மாயையே

யோனிபேதமொழித்தவர் முன்னுன்நாடகம் பலித்திடுமோ

நீயேவெட்கங்கொண்டு கண்முன்னிருந்தோடுவாய்

பெருமைசிறுமை காட்டியெனைநம்பவைக்க முயற்சித்தாலும்

உன்வஞ்சகத்தை ப்ரம்மமெனும் கல்லாலடித்தொடுக்குவேன்

இருப்பதொன்றேயெனும் வைராக்கியமுன் நீவரலாமோ

நீயேசோர்ந்துபோய் என்கண்முன் மறைந்தோடுவாய்.

[28]

**(நந்தவனத்திலோராண்டி மெட்டு)**

பயமொன்றும் வேண்டாம் மனமே

நீவந்த காரணமறிந்தாலே போதுமே

உனக்காதார மெதுவென பாரேன்

ப்ரபஞ்சத்தை படைத்த இறைவன் தானே

தாவித் தேடியோடியெங்கு மலையாதே

நீ தேடுவது நிலைத்தமைதியைதானே

நீபக்குவப்படத்தானே பூசை

உன்விருப்பம்போலாட ஏனுனக்காசை

நாமரூபந்தேடிப்பயனில்லை

எதுவுமேயோர்மிக்க நிரந்தரமில்லை

தாயினரவணைப்பைபோலே

இறைவனிடமுன்னை கொடுத்திடுவாயே

இறைவனை தேடியலையாதே

உனக்குஞ் சாட்சியாயிருப்பவனை விட்டுவிடாதே

சாட்சியா யுள்ளவனே இறைவனாம்
அதையாத்மனென்று பகல்வர் சான்றோராம்

உன்னோட்டத்திற் கிங்கோர் வழியில்லை
இறைசித்தமென சரணடை வேறுகதியில்லை

உன்னுணர்ச்சிக் கிடங்கொடாது போனாலே
அதை யுணர்வினாலே நீயுமறிவாயே

உணர்வுக்காதார மாத்மனே
ஆத்மனின்சக்தி நீதானே மனமே
நீதிடமாயிதை யுணர்ந்ததோர் கணமே
சர்வம் ப்ரம்மமயமென்றுணர்ந்திடுவாயே

உனக்கினி வேறாயேதுமில்லை யாதலால்
பயமேதுமில்லையென கூத்தாடிடுவாயே

வையகமேயுன்னை எதிர்த்தாலும்

பயமேதுமில்லையென கூத்தாடிடுவாயே

மதியாதுன்னையார் வெறுத்தாலும்

பயமேதுமில்லையென கூத்தாடிடுவாயே

கொண்டதுகைவிட்டே போனாலும்

பயமேதுமில்லையென கூத்தாடிடுவாயே

யாசகம்பெறும்நிலை வந்தாலும்

பயமேதுமில்லையென கூத்தாடிடுவாயே

நஞ்சை நண்பரூட்டியே போனாலும்

பயமேதுமில்லையென கூத்தாடிடுவாயே

வீணாய்ப்பழித்தே வெறுத்தோடினாலும்

பயமேதுமில்லையென கூத்தாடிடுவாயே

கொண்டதேகமறையுங்கால் வந்தாலும்

பயமேதுமில்லையென கூத்தாடிடுவாயே

பாரெங்குமே உணர்வுமயமே

அதனால் பயமேதுமில்லையெனக் கூத்தாடு மனமே

ஆத்மசக்திநீயே மனமே

உன்னிருப்பில் உணர்வாயொடுங்கிடு மனமே

ஆனந்தமானந்த மானந்தமே

எங்குந்நிலையான ஆனந்தம் பேரின்பமயமே! [29]

வாழுங்காலத்தி லெப்படியோ வாழ்ந்து

பிறர்பாவக்கணக்குகளை பரிசீலித்து

செத்தபின்னவர் சிவலோகம் போவேனென்று

எண்ணியே பேசுவது வீண்கதையே

சுயதர்மமென்றோர் கணக்குப்பெட்டியைக் காட்டி
வைகுந்தமெனக்கென மார்தட்டுவர்
மூடமனிதரிவர் சொல்லுஞ் சாத்திரமெல்லாம்
வேடிக்கையிலுமதி வேடிக்கையே

வெட்டிநியாயதர்மஞ் சொல்லிபிறறை புண்ணாக்கி
வஞ்சகமாயதை ரசித்து பெருமை கொள்வர்
இரட்டைவேடங்கொண்டு தனைதானேமாற்றி
கூறுங்கதைகளெல்லாம் பேயுரையே

உடம்பெல்லாம் பொடிபூசி உத்தமராய் வேஷமிட்டு
நியாயஞ்சொல்லி வஞ்சிக்குமோர் கூட்டமுண்டே
பித்தங்கொண்டலையுமிவர் கூறுமொழியெல்லாம்
காலத்தினோட்டம் முன்னிற்காதே

ஈதென்கடவுளென ஓருருவங்காட்டி
சித்தைக்கொண்டு சொத்துச்சேர்க்கும் கூட்டமுண்டே

மனப்பேயோட்டுவேனென்றிவர் கூறுமொழியெல்லாம்
காற்றோடுகாற்றாய் மறையும் மாயஜாலமே

நானேதெய்வமென்று வழிமுறைசெய்யச்சொல்லி
மக்களையாட்டிவைக்கு மீனருண்டே
தன்னையுமறியாரிவர் இறைவனையுமறியார்
காலனிடமகப்பட்டு மாள்வரே

சத்தியத்தையுணர்ந்து தன்னையறிந்தவர்முன்
சித்தும்பித்தும் தலைதெறித்தே ஓட்டங்காணுமே
எங்குமாதாரபூதமா நிறைந்திருக்கு மாசக்தியை
உனிலுணர்ந்தே வாழ்வில் உய்த்தெழுவாய்

வாழுங்கணத்தினிலே முக்திக்கான வழிதேடி
இப்போழுதேயடைய ஏங்குவருண்டேல்
தூயவறிவைகொண்ட சான்றோரவரென்றே
ஜெயபேரிகையெழுப்பி சங்கமூதடா

மயக்குமாயையயி னியல்பினையறிந்தே

புலன்களையடக்கி கட்டிவீசுவருண்டேல்

தூயகளிப்பினாலே சான்றோரவரென்றே

ஜெயபேரிகையெழுப்பி சங்கமூதடா

மூவாசைதனையறுத்து மயக்கமடையாதே

எல்லாமீசனென்று தன்னில்தானாயிருப்பர்

சித்தரவர் காரியமெல்லா மீசஞ்செயலேன்றே

ஜெயபேரிகையெழுப்பி சங்கமூதடா. [30]

சுயஅறிவை அறிவாயே

அதனாலுன்னை பெறுவாயே ()

யாவிலு மூடுருவி

காரியமில்லாதோர் காரணமானது

புலன்களா லறிவதற்கே

தூரமுமில்லாத பக்கமுமில்லாத ()

புண்ணிய பாவங்கள்

புலன்களின் பாவனையாகும்

உன்னை விளக்கிடும்

உண்மைப் பொருளை நீ உணர ()

நாமரூபமின்றி ஏகவஸ்துவாகி

காலவரையில்லா கருப்பொருளாகி

மோனத்திலே விளங்கும்

தூயஞான சைதன்ய ()

உலகயின்பம் வேண்டி

ஈனவழிகள் நாடி

தன்னைத்தொலைத் தழுமூடர்களே

நிலையான சுகம்பெற ()

மனமெனுமோர் கருவிகொண்டே
உன்னையாராய தொடங்க
மனதியல்பை விளக்கும்
சதானந்தந் தரும் () [31]

உடலேநானென்றெண்ணி உனையிழந்தாயே
பரசிவன்னீயென்பதை யுணரமறுத்தாயே ()
உடலுயிரிறை யென்பது மனதினினைவுகளே
எல்லாமோங்கிச் செயல்புரித லுனையன்றில்லை ()

விகாரமாறோடு மடமைம்ருக நுகர்ச்சியோடு
பேதமுள்ளந்தனிலோ தீராஜடச்சுமையோடு
நடைபிணமாய் நடக்கும் வாகனமான
உடலேநானென்றெண்ணி உனையிழந்தாயே

பூஷணம்பலவணிந்து பலவேடந்தரித்து
மூடமிகுந்தமோக மனதோடோங்கி வளர்ந்து
கைகால்முகங்கொண்டே யுருளும்பொம்மைபோன்ற
உடலேநானென்றெண்ணி உனையிழந்தாயே

மூன்றவஸ்தையிலுழன்று தாபத்ரயத்திலாழ்ந்து
அநித்யமாகினுமதை விடாமல்பிடித்துக்கொண்டு
மண்ணில்வீழவென்று காத்திருக்கும் சோகமான
உடலேநானென்றெண்ணி உனையிழந்தாயே

பேதமில்லாதுன்னி லிருமையோர்பாவனையே
சுயம்ப்ரகாசிக்கினு மறியாததுன்மாயையாலே
பூரணதயவுள்ளம்பலத்தையறியாதே நாறும்
உடலேநானென்றெண்ணி உனையிழந்தாயே

ப்ரம்மமேவசத்யமென்றே நீயறிந்துகொள்ளடா
நிலையில்லாதவாழ்வை நிஜமெனநம்பிடாதேடா

உன்னையறிவா லுணர்வதைவிட்டே

உடலேநானென்றெண்ணி உனையிழந்தாயே. [32]

யாரோ நான் யாரோ

எனக்கென்ன பேரோ அறியேனே

இருளுலாவும் பயமுலாவும் கருப்பை குழி தன்னில்

வீழச்செய்தென்னை வேடிக்கை பார்ப்பவர்

பாக்யம் என்றெனக்கு உடம்பை தந்தவளோ

என்னை கூறாமல் ஏதேதோ பழக்கி வைக்க

வேடிக்கை பார்க்குமோர் கூட்டமொன்றை சொல்லித்தர

தனியாய் நான் தத்தளிப்பதை ரசிக்கும் வித்தகன் ()

கருவினி லுணர்ந்ததை சொல்லத் தெரியவில்லை

உடலி லுறுப்பிருந்தும் எதுவுமே பயனில்லை

என்மனவோட்டத்தை சொல்ல வார்த்தை வரவில்லை

தனியே நான் படும்பாட்டை ரசிக்கும் வித்தகன் ()

கைகாலுதைப்பதை கண்டு சிரித்து ரசித்தது போக

பேசவாயெடுக்க வரோவேறாயெனை புரிந்துகொள்ள

நடப்பதென்னவென்றே புரியாமல் நான் விழிக்க

கற்பனையாயெதையோ கூறும் கூட்டத்தில் விட்டவர் ()

கருதந்த ஞானத்தை நினைந்தே யுருகிட

வரும்சுக துக்கமறிந்தே என்னைநொந்து சிரித்தழ

மற்றவரும் எனைப்பார்த்து கையாட்டி மகிழ்ந்திருக்க

அல்லார்ப்பாட்டமுள்ள கூட்டத்தில் தள்ளி ரசிப்பவர் ()

[33]

உள்ளும்புறமுமா யெங்குமூடுருவித் தானேயான

வஸ்தொன்று உண்டாமதை தெய்வமென்பர்

சைவதுமசைவற்றதுமாகி மனதினுட்கருத்தாய்

காண்பதெல்லாங் கருப்பொருளேயன்றி வேறில்லை

யாதையும் சாராதெங்கும் விரிந்துபரவி

வாக்மனத்திற்கு எட்டாதாயாய் விளங்கி

வெட்டவெளியாகி பலசக்திகளை தன்னுள்கொண்டு

அணுக்களைக்கூட்டிப் பிரித்தொரு நாடகந்நடத்தி

தூலமாயுஞ் சூட்சுமமாயு மதனினுண்ணியதான

காரணத்தாலெல்லாந் தானானதன்மையாய் விளங்கி

குணமில்லாததாகி தானேதனியொன்றாகி

யெல்லாகுணத்தாலானதுவாக பலவாகி விரிந்து

எங்குஞ்சாட்சியாயிருந்து யாவுமறிவானென
தெளிந்து யீதனையே பலமதங்க ளியம்புகிறார்

திரிபுடியாய்த் திகழ்ந்ததுவேயனைத்துமாய்க்காண்
மனமெனுமெல்லியதிரைபின் னிற்குஞ்சூத்திரதாரி

ஈங்கிதைநாடுவோராக நாட்டமாக நாட்டமுடையா
ரடைவதாயென கூத்திடுவதுமிதுவே

யாதுமிதனிருப்பேயாதலா லிதைவகுக்கவொண்ணாதே
யாதலாலிதை யறியவல்லார் வெகுசிலரே

அறிந்தார் மும்மலமற்ற மாசற்றார் அல்லலற்றார்
இஃதைப்பற்றியவரிதன் பயனனைத்துங் கண்டவரே

இடருக்கேயிடராயிருந்தெல்லை காட்டுவர்
வினைகளைப்பிசைந்து கூறிட்டு போடுவர்

அப்பொருளிஞ் சக்தியே மனதென்றுணர்ந்து
தேமேனெனதன் வேடிக்கையிலானந்தங் கொள்வர்

வேண்டுதல் வேண்டாமையிலானாகி
பாரினிலீசனென்று போற்றப்படுவர்

யாதுமிப்பரவஸ்துவாக மெய்யுணர்ந்த தவசீலர்
அதனோடிணைந்து தான்கரையதுவாகி நிற்பர்

நினதுள்ளும் மெய்ப்பொருளை யுணர்வாயடா
யெங்குமின்பவெள்ளம்பாய்வதை யுணர்வாயடா

விரும்பியபோ துன்னிலூற்றாய்பொங்கி வழியுமடா
ஊற்றைக்காணும்வழியோ எளிதாமடா

யாவுமாயிருக்கு மீசனென்னிலென் றெண்ணடா
சதாயிவ்வெண்ணமொன்றே வழிநடத்திசெல்லுமடா

யாதுமொருவேடம் வேண்டா மந்திரங்கள் செபிக்க வேண்டாம்

பூசையுடன்யாகங்கள் தோத்திரங்க ளெதுவும் வேண்டாம்

நான்குமறை வேதம் வேண்டா சாத்திரங்களெதுவும் வேண்டாம்

சாதனைகளேதும் வேண்டா தந்திரங்களேதும் வேண்டாம்

யாவுமீசனென்றே யாழ்ந்து யோதுவது போதுமடா

ஈசனென பாவித்து தொட்டுநின்றால் போதுமடா

சிந்தையிலே ஈசனொன்றே யுள்ளதென நிறுத்தடா

பரமநிலையெய்துதற் கதன்பெருமை உணரடா

நித்யானித்யபேதங்கண்டு மனதினை சீர்தூக்கடா

வைராக்கியத்தாலே யாவுமீசனென்ற புகழை பாடடா.
[34]

சாமிபலவுண்டென்று தேடியலையும் மாந்தரே
அறிவேதெய்வமென அறியாது போவீரோ?

பல்லுருவம் படைத்ததிலே மயங்கிவீழும் மாந்தரே
எங்கும்ப்ரகாசிக்கிறறிவே தெய்வமெனறிவீரோ?

அஃதிதெனபல கோட்பாடுபின்னலையும் மாந்தரே
தூயவறிவையே சிவமென வேதங்கூற கேளீரோ?

வேதங்கள் புனைந்தும் பலவேடங்கள் புனைந்து
விளையாடல்களில் மகிழ்வதவ்வறிவேயென யறீவீரோ?

வேடத்தையுண்மையென நம்பியலையும் மாந்தரே
மறைகளதை யொப்பாதென அறிவீரோ?

வேடத்திற்கடையாளமே பேரெனறியா மாந்தரே
வேடமுந்நாமமுமோ ருண்மைக்குள்ளென அறிவீரோ?

அறிவொளி ப்ரகாசந்தான் பாரெல்லாங் காட்டுதே
பாரெல்லா மறிவினோர் சக்தியின் தோற்றமே

இச்சக்தியை பராசக்தி யென்றே மறைகூறுதே
அறிவேயீசனென போற்றிக் கொண்டாடுதே

அறிவின்சக்தி மாயைமனமா யங்குமிங்குமலையுதே
அறிவெதையுஞ்சாராமல் வேடிக்கை பார்க்குதே

உன்னறிவாலறிவை யிங்குணர்ந்தாலே போதுமந்த
காட்சியெலாம் மாயத்திரை யென்றே விளங்குமாக

எங்குமீச னெதிலுமீச னெல்லாமீச னெனயறிவீரோ?
மனதடக்கி நடப்பதெல்லா மீசன்சித்தாய்ப் பாரீரோ?

ஓமென்றுகூறி யோகதவ முயற்சிமட்டும் போதுமோ

அதனுண்மைப் பொருளையறியா திருத்தலங்கே சரியோ?

உண்மையொளிர்க வென்றுகூறி யதன்பெருமை பாடவோ?

மடமைதனை மூட்டையாக்கி உணர்வுத்தீயில் பொசுக்கவோ?

கவலைதுறந்திங்கு வாழ்வதே வீடுபேறாமெனில்

உள்ளதனைத்திலு முள்ளொளியா யொளிர்வதான்மாவே

அஹம்ப்ரம்மமெனுந் தியானமல்லாதறிவே தருமேயோர் நிலைத்த சாந்தசுக மென்றிவீரோ?

மாந்தரே! அறிவே சத்தியமதுவே உத்தம ஞானமாம்

அஃதுன்னுணர்வாயுள்ளதென அறிந்து தெளிவீரோ?

[35]

ஆயகலைகளின் புகலிடமே அன்பின் பேரொளியே

வல்லமையெலாம் நிறைந்த அருட்கடலே

பாரெங்கிலுமுன் பெருமை யொளிர

ஞானமே விழித்தெழுவாய்

வைராக்கியமே விழித்தெழுவாய்

ஞானசாதனைகள் பயனுறவே யதற்காய்

எண்ணிய எண்ணமெலாஞ் ஜெயமடைந்திடவே

பாரெங்குமானந்தங் களிநடனமாடிடவே

ஞானமே விழித்தெழுவாய்

வைராக்கியமே விழித்தெழுவாய்

அறியாமையெனுங் காட்டிலகப்பட்டு

இருளெனும் பேயாலச்சங்கொண்டு

அலையுமிந்தவலமொழியவே

ஞானமே விழித்தெழுவாய்

வைராக்கியமே விழித்தெழுவாய்

செய்யுங்கடமை யாவதென் றறியோமே

வந்தநோக்கமே தென்றுமறியோமே

நிலைத்தபேறு நீங்காது கிடைத்திட

ஞானமே விழித்தெழுவாய்

வைராக்கியமே விழித்தெழுவாய்

சளைக்காதுஞ் சலிக்காதுமோடியலையும் மனதடங்க

அல்லலறுக்க செய்யுமுயற்சிகளெல்லாம் ஓங்கி

இன்பமெனும் பெருவெள்ளமெங்குந் திரைகொண்டுபாய

ஞானமே விழித்தெழுவாய்

வைராக்கியமே விழித்தெழுவாய்

சேற்றினில் வளருஞ் செந்தாமரைபோல்

அறியாமையிலு மறிவாயிருக்கும் மறைபொருளுணர

எவ்வுயிராய்க் கலந்திருக்கும் மெய்ப்பொருளுணர

ஞானமே விழித்தெழுவாய்

வைராக்கியமே விழித்தெழுவாய்

மறைபொருளெல்லா முன்புகழ்பாடிடுதே

செய்யும்பூசைவழி பாடெல்லாமுனக்கா யென்றாகுதே

சதார்ப்பரிக்குமன்பர் மனமுயர்ந்த தெளிவடையவே

ஞானமே விழித்தெழுவாய்

வைராக்கியமே விழித்தெழுவாய்

தேகமுள்ளில்லோ ராகாசங்காணுதே

தன்னைவென்றதை பிடிப்பது சாத்தியசத்தியமாகுதே

காணுமதை வசப்படுத்தும் மெய்த்திறமோங்கவே

ஞானமே விழித்தெழுவாய்

வைராக்கியமே விழித்தெழுவாய்

இறைக்கா யர்ப்பணிக்கு மறச்செயலாற்ற

சலனமில்லா சித்தந்தனில் மாசக்தியையுணர

ஞானமெனும் பெருநெருப்பென்றுமொளிர

ஞானமே விழித்தெழுவாய்

வைராக்கியமே விழித்தெழுவாய். [36]

பரமன் வாழ்கிறா னெங்கும்

பரமன் வாழ்கிறான்

பரமன் வாழ்கிறா னெதிலும்

பரமன் வாழ்கிறான்

பாலினுள்ளே சுத்தநெய் யொளிந்திருப்பதைப்போலே

கபடநாடகத்தில் தன்னை மறைத்துக் கொள்கிறான்

காணுங்காட்சிகளெல்லாமவன் மாயத்தோற்றமே

அன்புருவான பரமன் அனேகனாகிறான்

எத்தனையோ பேதங்களை இவ்வுலகம் கொண்டாலும்

பேதங்களனைத்திலுமே பரமன் வாழ்கிறான்

பூமியினில் அவதரித்தனைத்தும் மோர் குலமே

அது பரமனென்னும் அன்புநிறைந்த ஆனந்த குலமே

ராஜனுக்குமேழைக்கும் வரும் தூக்கமென்பதொன்றுதான்

வேதியரும் பாவிகளுமாய் வாழும் பூமியொன்று தான்

சேற்றிலும்புண்ணிய நதியிலும் விழுஞ்சூரியனொளி யொன்றுதான்

புண்ணியபாவமெல்லாம் பரமன் பார்வையிலொன்றுதான்

ஏதேதோவுருவங்கண் டேளனமா யெண்ணினாலும்

செயல்களை வைத்ததிலே உயர்வுதாழ்வு கொண்டாலும்

குணங்களை கோலமிட்டு வகைப்படுத்திப் பிரித்தாலும்

அன்புருவான பரமன் அனைத்துமாகிறான்.

[37]

சாத்திரமெல்லாம் பொய்யோமெய்யோ

கூறுமருளுரையெல்லாம் பொய்யோமெய்யோ

யானறியாது குழம்பியதை பவானீடத்து வைத்தேன்

திருஷ்டாந்தந் சொல்லியதை தீர்த்துவைத்தனள்

சாத்திரங்குறித்த பழங்கதை வேண்டாமென்றனை

சாத்திரமெல்லா முண்மையென சத்தியம் பகன்றனை

யானங்கே யுணர்ந்தையுணர்ந்தவாறு கூறருள் செய்தனை

உலகோர் பயனுறவே யதையிங்கே
சொல்லப்பணித்தனை

முதுமையிலாழ்ந்து சுகபோகத்தில் நாட்டமில்லாது

ஒருபோதுண்டுலக விஷயத்தை துறந்தர்ப்பணித்து

சுயநியமநிஷ்டையோடான ஜபதபத்தோடே
விசாரங்கொண்டு

புறஞ்செல்லாது தன்னில்தானாயிருக்க
சாத்தியமென்றனை

இவ்வுலகுபொய்யெனப் பகருமோர் சாதுக்கள்
கூட்டமுண்டே

ஈரெட்டில் பொறுப்பேற்கு மகனுக்கீதெப்படியாகு
மென்றேன்

யாராரேதெல்லாமிங்கே பொய்யென வகைக்காக
வென்றேன்

குலசாமியென கும்பிடுந்தெய்வமும் பொய்யோ
வென்றேன்

உன்னதமுணர்ந்து வாழ்ந்தாலில்லறமே நல்லறமென்றனை

எல்லாதெய்வமு மொன்றென குலதெய்வத்தை வணங்கி

நெடுவாழ்வோடு பிணியற பொருளோடறிவுந் தரவேண்டி

அறவழியிலாழ்ந்த உத்தமரின் மூதுரைவழிசெல்லப் பகன்றனை

தேடுமறப்பொருளின்பம் யாவிலும் இறையைக்காணப் பணித்தனை

இறையை முன்வைத்தாற்றுஞ் செயலிறைப்பணி யென்றனை

அனைத்திலுமிறையை காண்போனாகில் வீடுதானாயமையு மென்றனை

ஆதியில் பகன்றது துறப்பவர்க்கதுவே நல்லறமென்றனை

ஓதுஞ்சாத்திரமெல்லா மனதளவே யாகுமாகையால்

மனதையன்பினால் தூயதாக்கி எண்ணமறச்செய்து

சித்தத்தில் யாவுமீசஞ்செயலென காண்போர் மேலோரே

தூயமனத்தோடாயினுந் தெளிந்தனுபவமுண்டாகா

தன்னையுணர்ந்து தெளிந்து தன்னில் தானாயிருப்பவர்

பேதமொழித்திரு சொல்லறநிற்பவ ரென்னில் வேறல்ல

அன்புங்கருணையுமாட்சிசெய்ய
ஆனந்தக்கூத்தாடுவாரென

மங்கலஞ்சொல்லி நிறைவைத்தந்ததால் சிரித்து
மறைந்தாள். [38]

உன்னையறிவாயடா தாண்டவக்கோனே

உண்மையுணர்வாயடா தாண்டவக்கோனே

உன்னசுரக்கூட்டஞ்செயிப்பாயடா தாண்டவக்கோனே

பொறுமையிலே பெருமைகொள்வாய் தாண்டவக்கோனே

வெட்கமெனுமரக்கருண்டே தாண்டவக்கோனே
போதைகவலையென பேயருண்டே தாண்டவக்கோனே
கோபமெனுமூர்க்கனுண்டே தாண்டவக்கோனே
பொய்யாசையச்சங்களவுமுண்டே தாண்டவக்கோனே

ஞானந்தன்னை மறந்ததாலே தாண்டவக்கோனே
அசுரக்கூட்டஞ்சேர்ந்ததடா தாண்டவக்கோனே
தினஞ்செத்துவாழுங்கூட்டமதே தாண்டவக்கோனே
பிறவிக்கடலிலாழ்த்திவிடும் தாண்டவக்கோனே

செய்தபின்னே புலம்பியென்ன தாண்டவக்கோனே
வருவதற்காயச்சமென்ன தாண்டவக்கோனே
தேம்பியழுதுமாண்டார்கோடி தாண்டவக்கோனே
பொறுமையுள்ளவன் தேவனாவான் தாண்டவக்கோனே

உண்மையறிந்து திடங்கொள்வாய் தாண்டவக்கோனே
பாரெங்கும் பரமனுண்டே தாண்டவக்கோனே
அவன்சக்தியாலே நீயும்வந்தாய் தாண்டவக்கோனே
காண்பதெல்லாஞ் சக்தியாட்டம் தாண்டவக்கோனே

பாரனைத்துமவன் சக்தியடா தாண்டவக்கோனே
கவலையில்லை தெளிந்தெழுவாய் தாண்டவக்கோனே
பேதமில்லாதனைத்துமவனே தாண்டவக்கோனே
அனைத்துமதனில் நீயுமடக்கம் தாண்டவக்கோனே

உடம்பிருக்கும் வரைதானே தாண்டவக்கோனே
ஆனந்தமனுபவமாம் தாண்டவக்கோனே
ஞானத்தீயில் ஒளிர்ந்திடுவாய் தாண்டவக்கோனே
தெளிந்துணர்ந்து கொள்வாயடா தாண்டவக்கோனே

அகத்துள் பழங்குப்பயேனோ தாண்டவக்கோனே

கருமத்தொடர்பெதற்கு தாண்டவக்கோனே

மாயச்சித்தில்போய் நிற்காதே தாண்டவக்கோனே

மூலமறிந்தொடுங்கிடப்பா தாண்டவக்கோனே

வேதகுருபரசிவனாம் தாண்டவக்கோனே

உனக்காயவதாரங்கொண்டார் தாண்டவக்கோனே

கதியென்றே சரணடைவாய் தாண்டவக்கோனே

உன்னையறிந்து மேன்மை கொள்வாய்
தாண்டவக்கோனே

ஞானத்தோணியிலே நீந்திடப்பா தாண்டவக்கோனே

மெய்ப்பொருளையுணர்ந்திடப்பா தாண்டவக்கோனே

அன்புமலரை மோகித்திருப்பாய் தாண்டவக்கோனே

ஆனந்தக் கூத்தாடிடப்பா தாண்டவக்கோனே.

[39]

ஞானப்பிழம்பாயொளிர்வாய்

தன்னில்தானேயான குருவையெதிர் கண்டால்

காற்றுள்ளபோதுன்னை தூற்றிக்கொள்வாய்

கொடுமரக்கரை மூர்க்கரை அடியோடழிப்பாய்

மாயைதனையறிந்தே தெளிவாய்

மரணத்திற்கோர் மரணபயந்தனையளிப்பாய்

மெய்ப்பொருளைப்பற்றிக் கொள்வாய்

பந்தமொடு பயமில்லையென்றே கூத்திடுவாய்

கற்பனையோட்டத்தை நிறுத்திடுவாய்

மெய்ப்பொருள் சக்தியை பாரனைத்தும் காண்பாய்

எல்லாமானந்த மயமெனறிவாய்

ஆனந்தத்துள்ளேயனைத்தையுமறிவாய்

காண்பதெல்லாமதன் லீலையென தெளிவாய்

லீலைகளனுபவ மாக்கநீயென்றறிவாய்

கோபசாபபாபந் தவிர்ப்பாய்

பாரெங்குமன்பை பரவிடக்காண்பாய்

சாதுக்கள் சங்கமதைக் கொள்வாய்

பரமன்புகழை நெஞ்சில் கொண்டாடுவாய்

பாரிலுயர்ந்தது பக்தியென்றறிவாய்

பக்தியிலமாக முக்தியென்றறிவாய்

முக்திக்காயோட வேண்டாமென்றறிவாய்

முக்தியாவதுன்னை யறிதலென காண்பாய்

நிலைத்த ஆனந்தத்தை ரசிப்பாய்

கள்ளுண்டவன்போலதிலே மூழ்கித்திளைப்பாய்

பரமனையான்மாவாயறிவாய்

பரமனிலிந்தபாராடுவதை யுணர்வாய்

தாமரையிலையினீராவாய்

ஆனந்தக்களிப்பில்தன் நடனத்தை ரசிப்பாய்

எங்குஞ்சுயப்ரகாசமுணர்வாய்

ஏகாந்தத்தில்பர சுகானந்தங் காண்பாய்

எங்குமானந்தமானந்தமே

பரமசுகானந்தம் பேரானந்தமே! [40]

**நிறைவு!**

# உள்ளத்தின்

# உள்ளல்!



## ஜெய்மா பவானி